# CIVICS.

## in Tamil.

**For the use of Elementary Schools.**

எலிமெண்டரி பாடசாலைகளுக்கு உபயோகமாயுள்ள

சிவிக்ஸ், துரைத்தன விளக்கம்.

# இராஜாங்கமுறை நூல்



மதுரை, ஆர். வி. ஸ்கூல் உபாத்தியாயர்,

**E.** கோவிந்தசாமிராவ் அவர்களால்,

எழுதப்பெற்றது.



மதுரை, புதுமண்டபம், புத்தகவியாபாரம்,

இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன்,

வெளியிட்டது.

1926.



[விலை அணு 4.

# முகவுரை.

---

எலிமெண்டரி பாடசாலைகளுக்கு உபயோகமாக (சிவிக்ஸ்) இராஜாங்கமுறைநூல் சம்பந்தமான புத்தகங்கள் அநேகம் ஏற்பட்டிருப்பினும் இதை யாம் புதிதாய் வெளியிடுகிறோம். ஏனெனில், இது முன்னைய நூல்களைப் போலல்லாது புதுமாதிரியாகவும், தெளிவாகவும் எழுதப்பட்டிருக்கிறது. விஷயங்களைத் தொகுத்துச் சொல்வதிலும் பகுத்துக் கூறி, "இன்ன விஷயம் இன்னவிதம்" என்று தெரிவித்தால் சிறிது கற்றவர்களும் இலகுவாய் யாவற்றையும் அறியலாம், அன்றியும் பெரிய நூல்களைப் படித்தால் காலதாமதமாகும். இதைப் படித்தால் காலத்தின் லாபமும், விஷயங்களைத் தெளிவாய்த் தெரிந்து கொள்ளும் தன்மையும் உண்டாவதால் மாணவர்களுக்கும், உபாத்தியாயர்களுக்கும் இந்நூல் மிகுந்த நன்மையைக் கொடுக்குமென்றே நம்புகின்றோம்.

முதல் பல பதிப்புப் புத்தகங்கள் வெகு சீக்கிரத்தில் விலையாகிவிட்ட படியால், முதல் பதிப்பில் காணாத அனேக விஷயங்களை இரண்டாவது பதிப்பு முதல் தொகுத்து வெளியிட்டிருக்கிறோம்.

**E. M. G.**

## விஷய அட்டவணை.

# Contents.

சிவிக்ஸ், துரைத்தன விளக்கம்.

# இராஜாங்கமுறை நூல்

---

# CIVICS.

1-வது அத்தியாயம்.

(1) சிவிக்ஸ் என்பது:—குடிகளுக்கும், ராஜாங்கத்தாருக்கும் ஒருவருக்கொருவர் செய்துகொள்ளக்கூடிய கடமைகளையும், அந்தக் கடமைகளை அவ்வாறு செய்துகொள்வதால் உண்டாகும் நன்மைகளையும் பற்றிய நூலைக் குறித்தது.

(2) சிவிக்ஸ் என்பதின் பொருள் என்னவென்றால்:—அது ஸிவிக்ஸ் என்ற சொல்லிலிருந்து பிறந்தது. அதற்குப் "பட்டணத்தான்" என்று அர்த்தம். அப்பால் அது பட்டணத்தைக் குறித்தது.

(3) நமது ராஜாங்கத்தார் இதைப்பாடமாக வைத்ததின் நோக்கம் என்னவெனில்:—நான் யார்? அயலான் யார்? என்னை ஆள்கிறவர் யார்? நான் ராஜாங்கத்துக்கும், பிறருக்கும் எந்தக் கடமைகளை முடிக்கவேண்டும்? என்னால் கொடுக்கப்படும் வரி எவ்வாறு செலவாகிறது? நமது ராஜாங்கத்தார் தமது பிரஜைகளாகிய நம்மைக் காப்பதற்குச் செய்திருக்கும் ஏற்பாடுகள் யாவை?

கொள்ளை, பஞ்சம், தொத்து வியாதிகள், ஆகிய துன்ப காலங்களில் அவர்கள் எவ்வாறு ஆதரிக்கிறார்கள்? நாம் ராஜவிசுவாசிகளென்று எவ்வாறுணருகிறோம்? என்ற விஷயங்கள் எல்லாம் இந்தப் புத்தகத்தில் இலகுவாய்க் காணலாம். ஆகையால், இதைச் சிறுவயது முதலே படித்தால் சிறுவர்கள் தங்கள் கடமைகளையும், பாத்தியங்களையும், நன்றாய்த் தெரிந்துகொள்வதோடு நமது ராஜாங்கத்தின் நன்மைகளையும் நன்றாய் அறிந்துகொள்வார்கள்.

## 2-வது அதிகாரம்.

## ஆங்கில அரசியல்.

(1) உலகம் என்பது நாம் வசிப்பதற்கு இடமாயுள்ள இந்தப் பூகோளமே. ஆழ்ந்து யோசிப்போமானால் இந்தப் பூகோளப்பரப்பில் வசிக்கும் மனிதர்களுடைய கூட்டுறவே உலகம் என்று சொல்லவும் இடமுண்டு. அஃதெப்படியெனில், உலகத்திலுள்ள சராசரப் பொருள்கள் அனைத்தையும் மனிதன் பற்பல வகையில் தனக்கு உபயோகமாகும்படி செய்துகொள்ளக் கூடியவனா யிருப்பதால், அப்பொருள்கள் யாவும் மனிதன் பொருட்டே படைக்கப்பட்டிருக்கின்றன அல்லது உண்டாயிருக்கின்றன என்பது எவ்வகையிலும் பிசகாது. அதனால் 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்று பெரியோர் கூறியுள்ள பழமொழியும் உண்மையே ஆகும்.

(2) பூகோளப் பரப்பிலுள்ள பூபாகம் கண்டங்கள், தேசங்கள் அல்லது நாடுகள் முதலாயுள்ள பற்பல பிரிவுகளா

கப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒரு வீட்டை நடத்தத் தலைவன் ஒருவன் வேண்டுவது போலவே நாட்டை நடத்தவும் தலைவன் ஒருவன் வேண்டுவது அவசியமாகும். தலைவனில்லாத காரியம் ஒருபோதும் தலையெடாது. பொதுக்காரியங்களை நன்மையுற நடத்த முயலுவோர் முன்பு ஒரு தலைவனை நியமித்து, அவனது ஆணையின்படியே மற்றவர்கள் அக்காரியத்தைச் செய்து முடித்தல் வேண்டும். இல்லாவிட்டால் வயிற்றோடு மாறுபட்டு வாதாடிய கை, கால் முதலிய உறுப்புக்களைப்போல் துன்பமடைவார்கள். அதனால் 'நாட்டின் காரியங்களை நடத்தவும் ஒரு தலைவன் வேண்டும்' என்பதை ஒருவரும் மறுக்கவொண்ணாது. அத்தலைவனே அரசன் எனப்படுவார். அவ்வரசன் தன் நாட்டிலுள்ள குடிகளை நடத்தும் முறையே அரசியல் எனப்படும்.

**(3)** மேற்கூறியபடி நாட்டிற்குத் தலைவன் அரசன் எனவும், அந்நாட்டில் வசிக்கும் மனிதர்கள் அவ்வரசனது குடிகள் எனவும் கொள்ளப்படுவார்கள். அரசனுக்கும், அவரது குடிகளுக்குமுள்ள சம்பந்தம் 'கடமையும்,உரிமையும்' என இருவகைப்படும். இவை தந்தைக்கும், பிள்ளைக்கும் உள்ள சம்மந்தமே யன்றி வேறல்ல. தந்தை தன் பிள்ளைக்குச் செய்யவேண்டிய கடமையும், பிள்ளை தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமையும் உண்டு. அதுபோலவே பிள்ளை தந்தையிடம் எதிர்பாக்க வேண்டிய உரிமையும், தந்தை பிள்ளையிடம் எதிர்பார்க்கவேண்டிய உரிமையும் உண்டாம்.

**(4)** ஒரு பிள்ளைக்கு வேண்டிய உணவு, உடைகளைக் கொடுத்துப் போஷிக்கவும், அவனைப் படிப்பித்து நல்வழியில் நடத்தவும், நோய் முதலியன வற்றால் வருந்தாமல் அவனைப் பாதுகாக்கவும் அப்பிள்ளையின் தந்தை கட்டுப்

பட்டிருக்கின்றான். இதுவே தந்தை பிள்ளைக்குச் செய்ய வேண்டிய கடமையாகும்.

(5) மேற்கண்ட நன்மைகள் அனைத்தையும் பிள்ளை தன் தந்தையிடம் பெறத்தக்க பாத்தியதை உடையவனாய் இருக்கின்றான். இதுவே, பிள்ளை தநதையிடம் எதிர்பார்க்கும் உரிமையாகும். தந்தையிடம் நன்மைகளைப்பெற உரிமையுற்றிருக்கும் பிள்ளை அத் தந்தையின் கட்டளைகளை மேற்கொண்டு அடங்கி நடந்து, அவரிடத்தில் நீங்காதஅன்புடையவனாய் இருக்கக் கட்டுப்பட்டிருக்கிறான். இதுவே பிள்ளை தந்தைக்குச் செய்யவேண்டிய கடமையாகும்.

(6 தந்தை தன் பிள்ளையைப் பாதுகாத்துவரக் கடமைப்பட்டிருக்கின்றமையால் இவன் தேடும் பொருள்களை அனுபவிக்கத் தந்தை பாத்தியதை உடையவனாய் இருக்கின்றான். இதுவே தந்தை பிள்ளையினிடம் எதிர்பார்க்கும் உரிமையாகும்.

(7) அரசருக்கும், குடிகளுக்கும் உள்ள சம்பந்தங்களும் இவையே. குடிகளுக்கு அரசரே தந்தையாவர். அன்றி அரசரைப் பிரத்தியட்ச தெய்வமென்றும் அறிவுடையோர் கூறுவர். அரசர் தன் குடிகளுககு எவ்வகையிலும் துன்பம் நேரிடாதபடி காத்து, அவ்வப்போது வேண்டும் நன்மைகளைப் புரிந்து, இன்பமுண்டாக்கக் கடமைப்பட்டிருக்கிறார். தன்னாலும், தன் உத்தியோகஸ்தர்களாலும், வேற்றரசராலும், கள்ளர் முதலிய துஷ்டர்களாலும் யாதொரு துன்பமும் தன் குடிகளுக்கு நேரிடாதபடி காக்கவல்லாரே செங்கோல் அரசராகும் என்று பெரியோர்கள் இராஜலட்சணம் கூறியிருக்கின்றனர். இப்படிச் செய்யும் செய்கையே அரசர் குடிகளுக்குச் செய்யவேண்டிய கடமையாகும்.

(8) மேற்கண்டவாறு அரசனிடத்து நன்மைகளைப்பெறக் குடிகள் பாத்தியதை உடையவர்களா யிருக்கின்றனர். இதுவே குடிகள் அரசரிடம் எதிர்பார்க்கும் உரிமையாகும்.

(9) அரசரிடம் நன்மைகளைப்பெற உரிமையுள்ள குடிகள் அவ்வரசர், பொது ஜனங்களின் நன்மையை நோக்கி, ஏற்படுத்தும் கட்டளையைக்கொண்டு, அவற்றின்படி நடக்கவும், பொதுக்காரியங்களை நடத்துவதற்காகத் தம்முடைய சம்பாத்தியத்தில் சிறிதளவுபொருள் செலுத்தவும் கட்டுப்பட்டிருக்கின்றனர். இதுவே குடிகள் அரசருக்குச் செய்யவேண்டிய கடமையாகும்.

(10) குடிகளுக்கு நன்மைகளைச் செய்யக்கடமைப்பட்டிருக்கும் அரசர், தன்குடிகள் தன்னிடத்து அன்புடையவர்களாய்த் தன்கட்டளை மீருமலிருக்கவும், பொதுச் செலவின்பொருட்டு வரிகளைப்பெறவும் பாத்தியதை உடையவராய் இருக்கின்ருர். இதுவே அரசர் குடிகளிடத்து எதிர்பார்க்கும் உரிமையாகும்.

(11) இனி நம்மையாளும் ஆங்கில அரசுக்கும், அதன்குடிகளாகிய நமக்குமுள்ள கடமையும், உரிமையும் பற்றிச் சிறிது ஆராய்வோம். அவ்வாறு ஆராய்ந்து, அதன் அமைப்புக்களைப் பொது நோக்கமாக அறிவதே இப்புத்தகத்தின் அபிப்பிராயமாகும்.

(12) சுமார் 150- வருஷமாக நம்மை நீதியுடன் பரிபாலித்துவரும் ஆங்கில அரசாட்சியில் இப்போது நமக்கு அரசராக விளங்குபவர் ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தி என்பவர். இவர் இங்கிலாந்தின் அரசரெனவும், இந்தியாவின் சக்கரவர்த்தி எனவும் சொல்லப்படுவார்.

(**13**) இந்த ஆங்கில அரசாட்சியார் தமது கடமையை மேற்கொண்டு நமக்குச் செய்துள்ள நன்மைகளைத் தனியே ஒருவாறு ஆராய்ந்தறிவோம்.

---

## 3-வது அதிகாரம்.

## இந்திய அரசர்.

(**1**) இந்தியாவானது இங்கிலாந்து தேசத்தின் அரசராகிய ஐந்தாவது ஜார்ஜ் சக்கரவர்த்தி அவர்களினுடைய ஆளுகைக் குட்பட்டது.

(**2**) பலசிற்றரசர்களுக்கு மேற்பட்ட அரசருக்குச் சக்கரவர்த்தி என்று பெயர்.

(**3**) சக்கரவர்த்திக்குப் பிரதிநிதியாய் இந்தியாவில் இராஜாங்கம் நடத்துகிறவர் வைசிராய் அல்லது கவர்னர் ஜெனரல்

(**4**) கவர்னர் ஜெனரலுக்கு உதவியாய் ஏற்பட்டிருக்கும் சபைகள் இரண்டு, அவை.

1. நிர்வாக சபை. அல்லது மேல்விசாரணை சபை.

2. சட்ட நிரூபண சபை. இதில் லெஜிஸ்லேடிவ் அஸெம்ப்ளி என்றும், கௌன்ஸில் ஆப் ஸ்டேட் என்றும் இருவகை உண்டு.

(**5**) நிர்வாக சபையின் அங்கத்தினர் 7 பேர், இவர்கள் இந்தியா தேசத்துத் துரைத்தன விஷயங்களில் தேர்ச்சி பெற்றவர்கள்.

(**6**) கவர்னர்ஜெனரலும், அவருடைய நிர்வாகசபையும் சேர்ந்ததுதான் இந்தியா கவர்ன்மெண்ட் என்று பெயர்.

(**7**) கவர்னர் ஜெனரல் அவர்களின் சபையின் நோக்கமென்ன வெனில், இந்தியாவை ஆளுவதில் நிர்வாக சபை

யார் ஒருமனப் பட்டவராய்க் கவர்னர் ஜெனரலுக்கு வேண்டிய சட்டங்களை ஏற்படுத்திக் கவர்னர் ஜெனரலின் அநுமதியின்மேல் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவார்கள்.

(8) இச்சபையின் அங்கத்தினர் கவர்னர் ஜெனரலும், அவருடைய மந்திராலோசனைச் சபையும் உள்பட 69பேர்.

(9) இந்த இரண்டு சபைகளும் இங்கிலாந்திலிருக்கும் இந்து தேசத்தின் காரிய தரிசியின் அதிகாரத்திற் குட்பட்டிருக்கின்றன.

(10) இந்துதேசத்துக் காரியதரிசிக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் இந்தியா சம்பந்தமான எல்லா விஷயங்களையும் மேல்விசாரணை செய்வதும், இங்குள்ள சமாச்சாரங்களை உள்ளபடி அறிந்து, இங்கிலீஷ் கவர்ன்மெண்டாருக்கு அறிவிப்பதும்.

(11) இவருக்கு உதவியாக ஏற்பட்டிருக்கும்சபை:-பத்து வருஷங்களுக்குமேல் இந்தியாவிலிருந்து அதிக அனுபோக சாலிகளான ஆங்கிலேய கனவான்களும், இரண்டு இந்திய கனவான்களுமாகச் சேர்ந்து, 15 அங்கத்தினர்களுள்ள ஒரு மந்திராலோசனைச் சபை.

(12) இந்தியா காரியதரிசியாருடைய அதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டவர்:—இங்கிலீஷ் கவர்ன்மெண்டாருக்குத் தலைவரான சக்கரவர்த்தி யவர்களுக்கும், ஜனப்பிரதிநிதி சபையாருக்கும் கீழ்ப்பட்டவர்.

(13) ஜனப்பிரதிநிதி சபை இரண்டு வகைப்படும். இவை இரண்டுக்கும் பொதுவாய்ப் பார்லிமெண்டு என்று பெயர்.

**(14)** ஒவ்வோரு சபைக்கும் பெயர் என்னவெனில்:— ஒன்று ஹௌஸ் ஆப் லார்ட்ஸ். இது பிரபுக்களின் கூட்டம். இதில் மெம்பர்கள் 600-பேர். மற்றொன்று ஜனப் பிரதி நிதிகளால் ஆன ஹௌஸ் ஆப் காமன்ஸ். இதில் மெம்பர்கள் சுமார் 670-பேர்.

**(15)** ஆங்கிலேயர்களுக்கு உட்பட்ட நாடுகளின் பரிபாலன விஷயமாய் அரசருக்கு உதவியாகப் பார்லிமெண்டிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட 40-பேர்கள் அடங்கிய காபினெட் என்னும் சபை ஒன்று இருக்கிறது.

**(16)** இவர்களின் முதன்மையானவர்க்குப் பிரதான மந்திரி (ப்ரைம் மினிஸ்டர்) என்று பெயர்.

**(17)** இந்தியா கவர்ன்மெண்டு **8** இலாகாக்களாய்ப் பிரிகப்பட்டிருக்கிறது. அவை:—1. அன்னிய துரைத்தன விசாரணை இலாகா. 2 இந்தியா சம்மந்தமாக இங்கிலாந்தில் நடக்கும் அரசாட்சி இலாகா. 3. விவசாயத்தீர்வை இலாகா. 4. பொக்கிஷ இலாகா. 5. வர்த்தகக் கைத்தொழில் இலாகா. 6. சட்ட நிர்மாண இலாகா. 7. கல்வி நகர பரிபாலன இலாகா. 8. சைன்னிய இலாகா.

## 4-வது அதிகாரம்.

## மாகாண அரசாட்சி.

---

**(1)** அரசாட்சி விஷயமாய் இந்தியாவை 14-மாகாணங்களாகப் பிரித்திருக்கிறார்கள்.

**(2)** ஒவ்வொரு மாகாணமும் ஒவ்வொரு கவர்னர்களின் மேற்பார்வைகளிலும், சில மாகாணங்கள் லெப்டினென்ட் கவர்னர்களின் மேல்விசாரணையிலும், சில மாகாணங்கள்

சிப் கமிஷனர்களுடைய மேல் விசாரணையிலும், உட்பட்டிருக்கின்றன.

(3) நாமிருக்கும் மாகாணத்தின் பெயர் சென்னைராஜதானி எனப்படும். இது ஒரு கவர்னரின் பரிபாலனத்திற்குட்பட்டது.

(4) சென்னை ராஜதானியைப் பரிபாலனம் செய்யும் கவர்னருக்கு உதவியாய் இரண்டு சபைகள் ஏற்பட்டிருக்கின்றன அவை:—

1. ஆலோசனைச் சபை.

2. சட்ட நிரூபண சபை.

(5) ஆலோசனை மெம்பர்களுக்கு மந்திரிகள் அல்லது கௌன்சிலர்கள் என்று பெயர்.

(6) ஆலோசனைச் சபை அங்கத்தினர் கௌன்சிலர் மூன்றுபேர். அவர்கள் சக்கரவர்த்தி அவர்களால் நியமிக்கப்பட்டு 5-வருஷம் அதிகாரம் செலுத்துவார்கள்.

(7) பொதுவாய்த் துரைத்தன முறை கவர்னர் தலைமையமைந்த ஆலோசனைச் சபையாரால் நடத்தப்பட்டு வருகிறது.

(8) சட்ட நிரூபண சபை ஏற்பட்டதின் நோக்கமென்னவெனில்;— ஜனப்பிரதிநிதியின் வழியாய் ஜனங்களின் குறைகளைக் கவனித்து, நிவர்த்திசெய்வதற்குரிய சட்டங்கள் ஏற்படுத்துவதற்காகவே இந்தச் சபை ஏற்பட்டிருக்கிறது.

(9) இந்தச் சபையின் அங்கத்தினர் கவர்னர் நீங்கலாக 127-பேர் ஆகும்.

(10) இவர்கள் யார் யார் எனில், சட்ட நிரூபண சபை புது அரசியல் சீர்திருத்தத்தின்படி சென்னை சட்ட நிரூ

பண சபையின் அமைப்புப் பின்வருமாறு:—

அரசாங்கத்தாரால் நியமிக்கப்படுபவர்கள்.

| | |
|---|---|
| எக்ஸ்அபிஷியோ உத்தியோகஸ்தர்கள் | 4 |
| தாழ்ந்த வகுப்பார் | 5 |
| தனிப்பிற தேசங்கள் | 1 |
| உத்தியோகஸ்தரும், உத்தியோகஸ்தரல்லாதாரும். | 19 |

ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள்.

வியாபாரிகள்:—

| | | |
|---|---|---|
| சென்னை வியாபாரச்சபை | 2 | 5 |
| சென்னை வர்த்தகச் சங்கம் | 1 | |
| தென்னிந்தியா வியாபாரச் சபை | 1 | |
| நாட்டுக்கோட்டை நகரத்தார்சங்கம் | 1 | |

| | | |
|---|---|---|
| தோட்டக்காரர்கள்:— நிலச்சுவான்தார்கள்:— | சங்கம் | 1 |

| | | |
|---|---|---|
| ஜமீன்தார்கள் | 5 | 6 |
| ஜமீன்கள் | 1 | |

| | |
|---|---|
| ஐரோப்பியர் | 1 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | 1 |
| இந்திய கிறிஸ்துவர்கள் | 5 |
| சர்வகலாசாலை | 1 |
| மகம்மதியர்கள் | 13 |
| பொது-நகரத்தார்கள் | 9 |
| ஷை ஜில்லாவாசிகள் | 56 |
| ஆக | 127 பேர். |

(**11**) அரசாட்சி விஷயமாய்ச் சென்னைராஜதானியை 25 ஜில்லாக்களாகப் பிரித்திருக்கிறார்கள்.

(**12**) ஒவ்வொரு ஜில்லாவிற்கும் தலைமை அதிகாரி கலெக்டர்.

**(13)** கலெக்டர் என்னும் பதத்திற்கு வசூலிப்பவர் என்று அர்த்தமாகும்.

**(14)** கலெக்டருடைய முக்கிய அலுவல்கள்.

1. நிலத்தீர்வை வசூல் செய்தல்.
2. ஜில்லா சம்பந்தமான நிலவழக்குகளை விசாரித்தல்.
3. போலீஸ் டிபார்ட்மெண்டை மேல்விசாரணை செய்தல்.
4. பெரிய கலக முண்டானால் போலீஸ் டிபார்ட்மெண்டின் உதவியைக்கொண்டு அடக்கல்.
5. ரோட்டுகள், கட்டிடங்கள், தண்ணீர்வசதி இவைகளைச் சோதித்துக் குறைகளை நீக்கல்.
6. தொத்து வியாதி முதலியவைகள் தன் ஜில்லாவில் பரவாமல் வேண்டிய ஏற்பாடு செய்தல்.
7. முனிசிபாலிட்டி, யூனியன் எங்கெங்கே அவசியமென்றறிந்து, கவர்னருக்குச் சிபார்சு செய்தல்.
8. டிஸ்டிரிக்ட்டு போர்டுக்கு உதவியாயிருந்து ஆதரித்தல், ஜில்லா பரிபாலன முதலியவற்றைப் பொறுப்பாய்க் கவனித்தல் இவரைச் சார்ந்தது.

---

## 5-வது அதிகாரம்.

## கிராமஏற்பாடு.

---

**(1)** ஒவ்வொரு ஜில்லாவையும் சுலபமான வழியில் பரிபாலனம் செய்வதற்காக டிவிஷனாகவும், தாலூகாவாகவும், பிற்காவாகவும், கிராமமாகவும் பிரித்திருக்கிறார்கள்.

(2) ஒவ்வொரு டிவிஷனுக்கும் தலைமையதிகாரி டிவிஷனுபீஸர் அல்லது டிப்டிகலெக்டர்.

(3) ஒவ்வொரு ஜில்லாவின் முக்கிய உத்தியோகஸ்தர்:- 1. கலெக்டர். 2. ஜில்லா ஜட்ஜி. 3. போலீஸ் சூப்பிரண்டெண்டு. 4 சிவில் சர்ஜன். 5. எக்ஸ்கியூடிவ் இஞ்சினியர். 6. ஜெயில் சூப்பிரண்டெண்டு. 7. பாரஸ்டு ஆபீஸர்.

(4) ஒவ்வொரு தாலூகாவிற்கும் தலைமையதிகாரி:— தாசில்தார்.

(5) ஒவ்வொரு ஜில்லாவின் போக்கிஷ அதிகாரி:— ட்ரஷரி டிப்டி கலெக்டர்.

(6) ஒவ்வொரு பிற்காவிற்கும் தலைமை அதிகாரி:-டிப்டி தாசில்தார்.

(7) ஒவ்வொரு கிராமத்திற்கும் தலைமையான அதிகாரி:- கிராம முனிசீப்.

(8) கிராம உத்தியோகஸ்தர்கள்:—

1. கிராமமுனிசீப் அல்லது நாட்டாண்மைக்காரர்.
2. மணியகாரர்.
3. கர்ணம் அல்லது கணக்கப்பிள்ளை.
4. தலையாரி அல்லது காவற்காரன்.
5. வெட்டியான்.
6. நீர்க்கட்டி அல்லது தண்ணீர் பாய்ச்சுகிறவன்.

(9) கிராமமுனிசீப்பின் வேலைகள்:—

1. தன் கிராமத்திலுள்ள நன்செய், புன்செய் நிலங்களுக்குத் தீர்வை வசூல் செய்து, அவற்றைக் கணக்குப்படி தாலூகா கஜானாவில் செலுத்துவது.

2. இறந்தவர்களையும், பிறந்த குழந்தைகளையும் பதிவு செய்வது.
3. ஐம்பது ரூபாய்க்கு உட்பட்ட வழக்குகளைத் தீர்த்து விடுவது.
4. சிறு அடிபிடி சண்டைகளை விசாரித்தும், ஒரு ரூபாய்க்குட்பட்ட களவுகளை விசாரித்தும் தண்டிப்பது.
5. தன் கிராமத்தில் போலீஸ்காரர் பிசகு செய்தால் மேலான அதிகாரிக்கு ரிப்போர்ட்டுச் செய்வது.
6. தன் கிராமத்தில் கூட்டக் கொள்ளைக்காரர்கள், சந்தேகப்பட்டவர்கள், கேடி இவர்கள் வந்தால் உடனே போலீசுக்குத் தெரியப்படுத்துவது.
7. தன் கிராமத்தில் வியாபாரிகள் அழுகிப்போன வஸ்துக்களை விற்றால் உடனே தடுத்து விடுவது.
8. அபாயகரமான கட்டடங்கள், வெடிமருந்து வஸ்துக்கள், திடீரென்று உண்டாகும் மரணங்கள், இவைகளைப்பற்றி உடனே மேலான அதிகாரிக்கு ரிப்போர்ட்டு செய்வது.
9. ஏழைகளான பலவீனர்கள், பைத்தியகாரர்கள் வழிதப்பி வந்த குழந்தைகள் இவர்களைப்பற்றிக் கவனித்து, அதற்குத் தக்க ஏற்பாடு செய்வது.
10. குற்றவாளிகளைச் சில மணி நேரம் காவலில் வைக்கவும், இவருக்கு அதிகாரமுண்டு.

**(10)** மணியகாரர் வேலை:—

1. கிராமமுன்சீப்புக்கு உதவியாயிருந்து, காலா காலங்களில் தீர்வைப்பணங்களை வசூல் செய்வது.

2. நிலங்களுக்குத் தண்ணீர் பங்கிட்டு விடுவது.

**(11)** கர்ணன் அல்லது கணக்கப்பிள்ளையின் வேலை:—

1. கிராமத்திலுள்ள நன்செய், புன்செய் தீர்வைக் கணக்குகளைத் தயார் செய்வது.
2. ஆறுகளிலும், கண்மாய்களிலும், ஏரிகளிலும் எவ்வளவு தண்ணீர் வந்திருக்கிறதென்று கணக்கெடுப்பது.
3. நிலங்களை அளந்து சர்வே பண்ணி, எல்லைக் கற்கள் ஊன்றுவது.

**(12)** தலையாரியின் வேலை:—

1. கிராமமுனிசீப் சொல்லும் காரியங்களைத் தண்டோராப்போட்டு, ஊராருக்குத் தெரிவிப்பது.
2. கணக்கப்பிள்ளைக்கு உதவியாய் இருந்து, அளவு சங்கிலி பிடிப்பது.
3. கிராமமுனிசீப் சொல்லும் கிராம சம்பந்தப்பட்ட சகல வேலைகளையும் செய்வது.

**(13)** வெட்டியான் வேலை:—

கிராமத் தபால்களைத் தாலூகாவுக்குக் கொண்டுபோகவும், தாலூகாத் தபால்களைக் கிராமத்திற்குக் கொண்டுவரவும், கிராமமுனிசீப் இடுகிற வேலைகளைச் செய்யவும் கடமைப் பட்டவன்.

**(14)** நீர்க்கட்டியின் வேலை:—

1. நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவது.
2. ஆற்றின் இருகரைகளையும், கண்மாய்களையும், ஏரிகளையும் தண்ணீர் உடைத்துக் கொண்டு போகாதபடி பார்த்துக் கொள்வது.

## 6-வது அதிகாரம்.

## கிரிமினல் அதிகாரம்.

பீடிகை:—தன் குடிகள் ஏதாவது தப்பிதம் செய்து விட்டால் அரசன் தன் இஷ்டம்போல் சிறியகுற்றத்திற்குப் பெரிய தண்டனையும், பெரிய குற்றத்திற்குச் சிறிய தண்டனையும் விதிப்பது நியாயமல்ல. குடிகள் தப்பிதம் செய்தால் அத் தப்பிதத்திற்குத் தகுந்தாற்போல் சட்டம் ஏற்படுத்திக்கொண்டு, பெரிய குற்றத்திற்குப் பெரிய தண்டனையும், சிறிய குற்றத்திற்குச் சிறிய தண்டனையும் விதிப்பது தான் நீதி, முந்தின அரசர்களின் காலத்தில் குடிகள் குற்றம் செய்தால் கண்ணைப்பிடுங்குகிறதும், மாறுகால் மாறுகை வாங்குகிறதுமா யிருந்தது. புருஷன் இறந்துபோனால் பெண்ஜாதி உடன்கட்டை ஏறுகிறதுமா யிருந்தது. தேவதைகளுக்கு நரபலிசெய்தும் வந்தார்கள். ஆனால் நமது ஆங்கில அரசாட்சியின் காலத்தில் அநேக சட்டங்களை ஏற்படுத்தி, அந்தந்தக் குற்றத்திற்குத் தகுந்தபடி தண்டனை செய்ய அநேக கோர்ட்டுகளையும், பல அதிகாரிகளையும் ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

(1) உலக முழுவதும் அரசுபுரியச் சர்க்காரால் பலவிதமாய் அதிகாரங்கள் ஏற்படுத்தி இருக்கிறார்கள் அவை:—

1. கிரிமினல் அதிகாரம்.
2. சீவில் அதிகாரம்.
3. கிராமக்கோர்ட்டு என்னும், கிராமப்பஞ்சாயத்துக் கோர்ட்டு அதிகாரம்.
4. ஸ்தல சுய ஆட்சி (யூனியன், முனிசிபல் அரசாட்சி)
5. ரெவினியூ அதிகாரம்.
6. சால்ட் அன்ட் ஆப்காரி அதிகாரம்.

7. காட்டிலாகா அதிகாரம்.
8. மராமத்து இலாகா அதிகாரம்.
9. ரெயில்வே அதிகாரம்.
10. வைத்திய சுகாதார இலாகா.
11. இராணுவ அதிகாரம்.
12. போலீஸ் அதிகாரம்.
13. வித்தியா இலாகா அதிகாரம்.
14. தபால் அதிகாரம்.
15. பத்திரப்பதிவு இலாகா அதிகாரம்.

இவைகளை ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

---

## கிரிமினல் அதிகாரம்.

**(1)** கிரிமினல் என்றால்:—

அடிபிடி சண்டைகள், கலகங்கள், கொலை, திருட்டு, வழிப்பறி, மோசம் இப்பேர்ப்பட்ட கேசுகளுக்குக் கிரிமினல் என்று பெயர்.

**(2)** கிரிமினல் உத்தியோகஸ்தர்கள்.

1. கிராம மாஜிஸ்திரேட்.
2. கிராமப் பஞ்சாயத்துக் கோர்ட்டார்.
3. பென்ச் மாஜிஸ்திரேட்.
4. கண்டோன்மெண்டு மாஜிஸ்திரேட்.
5. 3-வது கிளாஸ் மாஜிஸ்திரேட்.
6. 2-வது கிளாஸ் மாஜிஸ்திரேட்.
7. டிவிஷன் மாஜிஸ்திரேட்.
8. டிஸ்டிரிக்ட் மாஜிஸ்திரேட்.
   (1-வது கிளாஸ் மாஜிஸ்திரேட்)
9. பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட்டுகள்.
10. ஸெஷன் ஜட்ஜி.
11. ஹைக்கோர்ட் ஜட்ஜி.
12. பிரிவி கௌன்ஸில்.

(3) கிராம மாஜிஸ்திரேட் அதிகாரம்:—

சிறு அடிபிடி சண்டைகளை விசாரித்து முடிவு சொல்லவும், ஒரு ரூபாய்க்கு உட்பட்ட திருட்டுக் கேசுகளை விசாரித்துக் குற்றவாளியைச் சில நேரத்திற்குக் காவலில் வைக்கவும் அதிகாரம் உண்டு.

(4) கிராமக்கோர்ட்டு (கிராமப் பஞ்சாயத்துக் கோர்ட்டு) அதிகாரம்:—பொதுஜன நடபாதைகளை ஆபாசம் செய்தல், 10 ரூபாய்க்கு உட்பட்ட திருட்டு, சிறு கலகம் முதலியவைகளை விசாரித்து 15-ரூபாய்வரை அபராதம் விதித்தும், 50-ரூபாய் வரை கொடுக்கல், வாங்கல் முதலிய சீவில் விவகாரங்களை விசாரித்தும் தீர்ப்புச்செய்வார்கள். இக் கோர்ட்டு பலகிராமங்களுக்கு ஒரு கோர்ட்டாக கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்படும். இதன் மெம்பர்கள் 5 பேர்களுக்குக் குறையாமலும் 12 பேர்களுக்கு அதிகப்படாமலும் ஜனங்களால் தெரிந்தெடுக்கப்படுவார்கள். இவர்கள் 10-ரூபாய்க்குக் குறையாத கெஸ்தி செலுத்துகிறவர்களாகவும், தனவந்தர்களாகவும் ஜன உபகாரிகளாகவும், கௌரவத்திற்கு உழைப்பவர்களாகவும் இருப்பார்கள். இவர்களுக்குச் சம்பளம் கிடையாது.

(5) பெஞ்ச் மாஜிஸ்திரேட் அதிகாரம்:—

நியூஸென்ஸ், குடி முதலிய சொற்பக்குற்றங்களை விசாரித்துத் தீர்ப்புச் செய்வார்கள். இவர்களுக்குச் சம்பளம் கிடையாது. தாங்கள் தங்கள் கௌரவத்திற்காகவும் தங்கள் தங்கள் நாட்டின் நலத்திற்காகவும் வேலை செய்கிறார்கள். இவர்கள் தகுந்தகௌரவம் உடையவர்களாகவும், தகுந்த தனவந்தர்களாகவும் இருப்பார்கள்.

(6) கண்டோன்மேண்டு மாஜிஸ்திரேட் அதிகாரம்:—

கண்டோன்மெண்டு என்பது அன்னிய இராஜாங்கத்தார்களாலாவது, உள்நாட்டுக்காரர்களாலாவது, ஏற்படும் கலகங்களை அடக்குவதற்கு நியமித்திருக்கும் இராணுவ உத்தியோகஸ்தர்கள் வசிக்குமிடத்திற்குக் கண்டோன் மெண்டு என்று பெயர். இது திரிச்சி, பெங்களூர், பூணமல்லி இவ்விடங்களில் இருக்கிறது. இதில் இருப்பவர்கள் செய்யும் சுகாதாரச் சட்டத்திற்கு விரோதமான குற்றங்களையும், மற்ற சிறு குற்றங்களையும் விசாரித்துத் தீர்ப்புச் செய்பவா. இவருக்கு 3-ஆவது கிளாஸ் மாஜிஸ்திரேட் அதிகாரமும் கொடுக்கப்படும்.

(7) 3-ஆவது கிளாஸ் மாஜிஸ்திரேட் அதிகாரம்.—

பிராதுகளை விசாரித்துக் குற்றவாளிகளை ஒருமாதம் வரையில் காவலில் வைக்கவும், 100-ரூபாய்க்கு அதிகப்படாமல் அபராதம் போடவும் செஷன் கோர்ட்டுக்குக் கமிட்டி பண்ணவும் அதிகாரமுண்டு.

(8) 2-வது கிளாஸ் மாஜிஸ்திரேட் அதிகாரம்:—

பிராதுகளை விசாரித்துக் குற்றவாளிகளை ஆறுமாதம் தண்டிக்கவும், அல்லது 200-ரூபாய் அபராதம் போடவும் அல்லது அந்தக் கேஸைச் செஷன் கோர்ட்டுக்குக் கமிட்டி பண்ணவும் அதிகாரம் உண்டு.

(9) டிவிஷனல் மாஜிஸ்திரேட் அதிகாரம்:—

இவர்கள் மேற்கூறிய மாஜிஸ்திரேட்டுகளுக்கு அடுத்தபடியாக மேல் அதிகாரமுள்ளவர்கள். இவர்கள் அனேக

மாய் ஐரோப்பியர்களாய் இருப்பார்கள். ஒவ்வொரு டிவிஷனுக்கு அதிகாரிகளான ஸப்கலெக்டர், அஸிஸ்டண்டு கலெக்டர், டிப்டி கலெக்டர் முதலானவர்களாயிருப்பார்கள். இவர்களுக்கு ரெவினியூ அதிகாரமும் உண்டு. இவர்கள் அந்த டிவிஷனில் உள்ள பெருங் கேசுகளை விசாரணை செய்வார்கள். தாங்கள் தீர்ப்புச் சொல்லக்கூடாத பெரிய கேசுகளை விசாரித்து, ஸெஷன் ஜட்ஜிக்கு அனுப்புவார்கள். இவர்களுக்கும் 1-வது கிளாஸ் மாஜிஸ்திரேட் அதிகாரம் உண்டு.

**(10)** டிஸ்டிரிக்ட் மாஜிஸ்திரேட் அல்லது 1-வது கிளாஸ் மாஜிஸ்திரேட் அதிகாரம்:— அந்தந்த ஜில்லாக்களிலுள்ள எல்லா மாஜிஸ்திரேட்டுகளுக்கும் மேல் அதிகாரம் உடையவர். 2-வருஷம் காவலில் வைக்கவும், 1000-ரூபாய்க்கு மேற்படாமல் அபராதம் போடவும், தனக்குக் கீழ்ப்பட்ட மாஜிஸ்திரேட்டுகளிடமிருந்து வரும் அப்பீல்களை விசாரிக்கவும், கேசுகளை ஒரு கோர்ட்டிலிருந்து மற்றொரு கோர்ட்டுக்கு விசாரணைக்காக மாற்றவும் அதிகாரம் உண்டு.

**(11)** பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் அதிகாரம்:—

இவர்கள் 3 அல்லது 4 பேர் சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய தலைநகரங்களில் நியமனம் பெறுவார்கள். இவர்களுக்குள் ஒருவருக்குச் சீப் பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் எனப் பெயர். இவர்கள் தீர்மானத்தில் அநேக கேசுகளுக்கு அப்பீல் கிடையாது. அப்பீல் உள்ள கேசுகளை ஹைகோர்ட்டுக்கு அனுப்பிவிடுவார்கள்.

**(12)** ஸெஷன்ஸ் ஜட்ஜி அதிகாரம்:—ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒருவர் இருப்பார். இவர் பெருங் கொள்ளை,

கொலை முதலிய கேசுகளை விசாரிப்பார். இவருக்கு உதவி செய்ய 'ஜூரி, அஸெஸர்' என்று இரண்டு சபை உண்டு. இவர் ஜூரி சபையாரின் அபிப்பிராயத்தை அலட்சியம் செய்ய முடியாது. ஆனால் அஸெஸர்களின் அபிப்பிராயம் இவருடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாயிருந்தாலும், இவர் தன் அபிப்பிராயப்படி செய்யலாம். ஜூரியர்களின் அபிப்பிராயம் இவருடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாயிருக்கும் பக்ஷத்தில் அந்தக்கேஸ் ஐக்கோர்ட்டுக்கு அனுப்பப்படும். கீழ்க்கோர்ட்டுகளிலிருந்து வரும் கிரிமினல் கேசுகளையும், சீவில் கேசுகளையும் விசாரித்து, எவ்விதமான தண்டனையையும் விதிக்கவும், ரத்து செய்யவும் அதிகாரம் பெற்றவர். மரண தண்டனை விதித்தால் ஹைகோர்ட்டாரின் உத்தரவின் மேல்தான் நிறைவேற்ற வேண்டும்.

**(13)** ஹைக்கோர்ட்டு அதிகாரம்:—

இது இந்தியாவின் முக்கிய பட்டணங்களில் உள்ளது. இதில் இருக்கும் ஜட்ஜிகளுக்கு ஹைகோர்ட் ஜட்ஜிகள் என்று பெயர். இந்த ஜட்ஜிகளை மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியவர்கள் தான் நியமிப்பார்கள்.

இவர்களுக்கு நியாயத்தீர்ப்பில் சகல அதிகாரங்களும் உண்டு. இவர்கள் கீழ்க்கோர்ட்டாரின் தீர்மானத்தை மாற்றவும், அதிகப்படுத்தவும், அல்லது தள்ளவும் அதிகாரம் பெற்றிருக்கிறார்கள்.

**(14)** பிரிவி கௌன்ஸிலர்களின் அதிகாரம்:—

பிரிவி கௌன்ஸில் ஆங்கில சீமையில் இருக்கிறது. அதில் ஹைக்கோர்ட் தீர்ப்புகளின்மேல் சக்கரவர்த்தியவர்களுக்கு அப்பீல் உண்டு. அந்தப்பிரிவி கௌன்ஸிலர்

சபையார் அப்பீல் கட்டுகளைப் பார்வையிட்டுத் தங்கள் அபிப்பிராயத்தைச் சக்கரவர்த்தி யவர்களுக்குத் தெரியப் படுத்துவார்கள். அந்த அபிப்பிராயத்தை அனுசரித்துச் சக்கரவர்த்தி யவர்கள் தீர்ப்புச் செய்வார்கள்.

---

## 7-வது அதிகாரம்.

## சி வி ல் அ தி கா ர ம்.

பீடிகை:—நம்முடைய பள்ளிக்கூடத்தில் ஒரு பையன் தன்னுடைய சிலேட்டு, பென்ஸல், புத்தகங்களை வைத் திருக்கும்படி ஒரு பையனிடத்தில் கொடுத்தான். அந்தப் பையன் அவனை ஏமாற்ற நினைத்து, நான் உன்னிடத்தில் அவைகளை வாங்கவில்லை என்று சொல்லி விட்டான். அவன் உண்மையை அறிந்த சில பையன்களைக்கொண்டு அதை உபாத்தியாயரிடஞ் சொன்னான். அப்போது உபாத் தியாயர் அதை விசாரித்து அந்தக் குற்றவாளியிடமிருந்து புஸ்தகம், சிலேட்டைச் சொந்தக்காரனுக்கு வாங்கிக் கொடுப்பார் அல்லவா? அதுபோல் கொடுக்கல், வாங்கல், நிலம், சொத்து இவைகளை ஒருவர் அநியாயமாய் அபகரித் துக்கொண்டால் நீதிப்படி நியாயம் விசாரித்துத் தீர்ப்புச் சொல்லும்படி சீவில் கோர்ட்டு ஏற்பட்டிருக்கிறது.

(1) சீவில் என்பது என்னவென்றல்:—

பண வழக்குகள், நில வழக்குகள், சொத்து வியாஜ்யம் முதலியவைகள்.

(2) சீவில் உத்தியோகஸ்தர்கள்:—

1. கிராம முனிசீப்.
2. கிராமப் பஞ்சாயத்துக் கோர்ட்டார்.
3. டிஸ்டிரிக்ட் முனிசீப்.
4. சப் ஜட்ஜி.
5. டிஸ்டிரிக்ட் ஜட்ஜி.
6. ஹைக்கோர்ட் ஜட்ஜி.
7. பிரிவிகௌன்ஸில்.

(3) கிராமமுனிசீப் விசாரணை செய்யக்கூடிய சீவில் வியாச்சியங்கள்:—

கடனாகவாவது, கணக்கு கிறுவையின் மேலாகவாவது ஐம்பது ரூபாய்க்கு மேற்படாமல் இருக்கிற வியாச்சியங்களை விசாரணை செய்தல்.

(4) பஞ்சாயத்துக் கோர்ட்டார் அதிகாரம்:—

ஐம்பது ரூபாய் வரை கொடுக்கல் வாங்கல் முதலிய சீவில் விவகாரங்களை விசாரித்துத் தீர்ப்புச் செய்தல்.

(5) டிஸ்டிரிக்ட் முன்சீப் அதிகாரம்:—

மதிப்பில் 3000 ரூக்கு அதிகப்படாமல் இருக்கிற சொத்து அல்லது ரொக்கத்தின்பேரில் வருகிற வியாச்சியங்களையும், 200 ரூபாய்க்கு உட்பட்ட ஸ்மால் கேசுகளையும் விசாரணை செய்யலாம். டிஸ்டிரிக்ட் ஜட்ஜியின் ஊர்ஜிதத்திற்கு உட்பட்டுத் தங்கள் ஆபீஸ் சிப்பந்திகளை நீக்கவும், நியமிக்கவும் அதிகாரம் உண்டு. இவர் தீர்ப்புச் செய்த கேசுகளுக்கு ஸப் கோர்ட்டுக்காவது ஜில்லா கோர்ட்டுக்காவது அப்பீல் உண்டு.

(6) சப்ஜட்ஜிகள் அதிகாரங்கள்:—

டிஸ்டிரிக்ட் கோர்ட்டுகளைப் போலவே இவர்களுக்கும் அதிகாரம் உண்டு. டிஸ்டிரிக்ட் கோர்ட்டுகளில் அதிகக் கேசுகளைக் கவனிக்க வேண்டியிருக்குமாதலால் அவர்களுக்குச் சகாயமாய் இந்தக் கோர்ட்டுகளை நியமித்திருக்கிறார்கள். இவர்களால் தீர்ப்புச் செய்யப்பட்ட கேசுகளை ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொள்ளலாம். 10,000 ரூபாய்க்குட்பட்ட தொகையானால் முதலில் டிஸ்டிரிக்ட் கோர்ட்டிற்கும், பிறகு ஹைகோர்ட்டிற்கும் அப்

பீல் செய்யலாம். இவர் டிஸ்டிரிக்ட் ஜட்ஜியின் அங்கீ காரத்திற்குட்பட்டுத் தன் ஆபீஸ் சிப்பந்திகளை நீக்கவும், நியமிக்கவும் அதிகாரம் உண்டு.

(7) டிஸ்டிரிக்ட் ஜட்ஜி அதிகாரங்கள்:—

சிவில் சம்பந்தமான எல்லா அசல் அப்பீல் வியாச்சியங்களை விசாரிக்கவும், ஆபீஸ் உத்தியோகஸ்தர்களை ஒரு கோர்ட்டிலிருந்து மற்றொரு கோர்ட்டிற்கு மாற்றவும் தன் எல்லைக்குள்ளிருக்கிற கோர்ட்டுகளை நேரில் போய்ப் பரிசோதனை செய்யவும் அதிகாரம் உண்டு. இவர் தீர்ப்புச் செய்கிற கேசுகளுக்கு ஹைக்கோர்ட் அப்பீல் உண்டு.

(8) சென்னை மாகாணத்தில் தற்சமயம் 4 வகை ஜாதியிலும் நியமித்துள்ள ஜில்லா ஜட்ஜிகள், சப் ஜட்ஜிகள் ஜில்லா முனிசீப்புகள்:—

| உத்தியோகஸ்தர்கள். | உத்தியோகஸ்தர்களின் மொத்தத்தொகை. | பிராமணர். | பிராமணரல்லாதார். | கிறிஸ்தவர். | மகமதியர். |
|---|---|---|---|---|---|
| 1. ஜில்லா ஜட்ஜிகள் | 4 | 4 | 0 | 0 | 0 |
| 2. சப் ஜட்ஜிகள் | 48 | 31 | 13 | 3 | 1 |
| 3. ஜில்லா முனிசீப்புகள் | 165 | 124 | 34 | 3 | 4 |

குறிப்பு:—ஹைக்கோர்ட்டிற்குப் பிரிவி கௌன்ஸில்:-இவைகளைப் பற்றிக் கிரிமினல் அதிகாரத்தில் சொல்லியிருக்கிறது. பிரிவி கௌன்ஸிலுக்கு அப்பீல் செய்யவேண்டுமானால் வியாஜியமானது 10,000 ரூபாய் அல்லது அதற்கு மேற்பட்ட தொகையா யிருக்கவேண்டும். பிரிவி கௌன்ஸிலுக்கு ஒரு அப்பீல் செய்தால் 4500 ரூபாய் வரையில் செலவாகும்.

## 8-ஆவது அதிகாரம்.
## ஸ்தலசுய ஆட்சி.

பீடிகை:—ஒருவனுக்கு நான்கு குமாரர்கள் இருந்தார்கள். தகப்பன் அந்த நான்கு பேருக்கும் ஒவ்வொரு வேலையைக்கொடுத்துக் கூலி ஆட்களையும் திட்டம் செய்து கொடுத்தார். அவர்கள் எந்தக்காரியம் செய்தாலும் தன் தகப்பனாருடைய ஆலோசனையைக்கேட்டுச் செய்வார்கள். அதில் ஒருவன்மாத்திரம் தன்காரியங்களைச் சுயபுத்தியோடு நன்றாய்ச்செய்து வந்தான். அவன் தகப்பனார் அவனைப் பார்த்து "மகனே! நீ உன் இஷ்டப்படிக்கு அந்தஜனங்களை அடக்கி ஆண்டு, நீயே ஒவ்வொரு காரியத்தையும் மேற் பார்த்து நடத்திக்கொண்டுவா" என்று சொல்லிவிட்டார். அவன் அப்படியேசெய்தான். அதுபோல் ஸ்தலசுய ஆட்சி என்பது ஒரு நாட்டில் உள்ள ஜனங்கள் தங்களுக்கு வேண்டிய நன்மைகளைத் தாங்களே தேடிக்கொள்ள நம் இராஜாவால் கொடுக்கப்பட்டிருக்கிற சுதந்திரம்.

(I) ஸ்தல சுய ஆட்சி என்பது:—ஒவ்வொரு ஜில்லாவிலும், தாலுகாவிலும், பெரிய பட்டணங்களிலுமிருக்கும் ஜனங்கள் தங்களுக்கு வேண்டிய நன்மைகளைத் தாங்களே தேடிக்கொள்ளும்படி இராஜாங்கத்தாரால் அளிக்கப் பட்டிருக்கும் ஒருவித சுதந்திரத்திற்கு ஸ்தலசுய ஆட்சி என்று பெயர்.

(2) ஸ்தல சுய ஆட்சி மூன்று வகைப்படும் அவை:—

1. யூனியன்.
2. லோகல் போர்டு-இதில் 1. ஜில்லா போர்டு.
   2. தாலூகா போர்டு.
3. முனிசிபாலிட்டி (நகர சங்கங்கள்.)

(3) யூனியன் என்பது என்னவென்றால்:—

சிறு பட்டணத்திலுள்ள ஜனங்கள் தங்களுக்கு வேண்டிய நன்மைகளை, அந்த ஊரில் தகுந்த அந்தஸ்துள்ளவர்களை நியமித்து நடத்துவார்கள். அந்தச் சபைக்கு யூனியன் பஞ்சாயத்து என்று பெயர். இந்தச் சபையில் கிராமத்தின் விஸ்தீரணத்திற்குத் தகுந்தபடி 7-முதல் 15 வரையில் மெம்பர்கள் இருப்பார்கள். இதில் கிராமாதிகாரி ஒரு மெம்பராக இருக்கவேண்டும். மற்ற மெம்பர்கள் சர்க்கார் வரிகொடுக்கிறவர்களாய் இருக்க வேண்டும் இதன் அக்கிராசனாதிபதியைச் சபையின் மெம்பர்கள் தெரிந்தெடுப்பார்கள்.

(4) யூனியன் பஞ்சாயத்து:-அவை இரண்டு வகைப்படும்.

1. 5,000 ஜனங்களுக்குக் கீழே யிருந்தால் மைனர் யூனியன் என்று பெயர்.

2. 5000 ஜனங்களுக்கு மேலாயிருந்தால் மேஜர் யூனியன் என்று பெயர்.

(5) யூனியன் உத்தியோகஸ்தர்கள்:—

1. சேர்மென் 3. பில்கலெக்டர்
2. கிளார்க்கு. 4. மேஸ்திரி.

(6) யூனியனுக்கு வரும்படி:—

(1) வீட்டுவரி (2) பந்தல்வரி (3) தொழில்வரி (4) வண்டி நிறுத்தும் இடத்தின் வரி (5) குப்பை விற்கும் பணம் (6) குளத்தின் பாசிக் குத்தகைப் பணம்.

(7) இப்படி வருகிற வரும்படிக்குச் செலவுகள்:—

ரஸ்தா, ஜலதாரை, குளம், கிணறு இவைகளை பழுது படுத்தல், தெருக்களிலுள்ள குப்பைகளைக்கூட்டித் தொம்

பண்களை ஏற்படுத்தல், கக்கூசு கட்டிச் சுத்தம் செய்தல், ஜலதாரைகளைச் சுத்தம் செய்தல். யூனியனில் மேற்படி செலவுகளுக்குக் கட்டாத பக்ஷத்தில் லோக்கல்போர்டி லிருந்து பணம் வாங்கிக்கொள்வார்கள்.

(8) ஜில்லா போர்டின் அதிகாரங்கள்:—

ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு பிரதேச அரசாட்சி சங்கம் உண்டு. இதற்கு இந்த ஜில்லாவின் கலெக்டர் உள்பட ஜில்லாவின் விஸ்தீரணத்திற்குத் தக்கபடி 24 முதல் 52 மெம்பர் வரையில இருப்பார்கள். இந்த மெம்பர்கள் படிப் புள்ளவர்களாயும், தனவந்தர்களாயு மிருக்க வேண்டும். இந்தச்சபை அடிக்கடி கூடும். இந்த மெம்பர்களை ஒரு தடவை நியமித்தால் 3-வருஷம் வரை மெம்பராயிருக் கலாம். மறுபடி புதுநியமனம் ஆகவேண்டும். இவர்களுக் குச் சம்பளம் கிடையாது. இச்சபையின் அக்கிராசனாதி பதிக்கு டிஸ்டிரிக்ட் போர்டு பிரஸிடெண்டு என்று பெயர். இவர் இச்சபை மெம்பர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட வராகவு மிருப்பார். இதில் வேலை செய்கிற கிளார்க்கு, பில் கலெக்டர், மேஸ்திரி இவர்களுக்குச் சம்பளம் தவிர பென்ஷன் கிடையாது.

(9) தாலூகா போர்டு அதிகாரங்கள்:—

ஜில்லாவை அநேக தாலூகாக்களாகப் பிரித்திருக்கிறார்களல்லவா? லோகல் பண்டு விஷயமாய் ஒன்று அல்லது இரண்டு மூன்று தாலூகாக்களுக்கு ஒரு போர்டு உண்டு. தாலூகாபோர்டு சபைக்கு 12 முதல் 24 மெம்பர்கள் வரையில் இருப்பார்கள். இதில் மெம்பராயிருப்பவர்கள் படித்தவர்களாகவும், தனவந்தர்களாகவும் இருக்கவேண்டும்.

இந்தச் சபை மாதம் ஒருதரம் கூடும். இச்சபையின் அக்கிராசனாதிபதி இச்சபை மெம்பர்களுள் ஒருவராகவும் சபையார்களாலேயே தெரிந்தெடுக்கப்பட்டவராகவுமிருப்பார். இவருக்குத் தாலூகா போர்டு பிரஸிடெண்டு என்று பெயர்.

**(10)** மேற்கண்ட லோகல் போர்டு சபையார் கவனிக்க வேண்டிய விஷயங்கள்:—

1. ரஸ்தாக்களைப் புதிதாய்ப் போடுதல்.
2. பழய ரஸ்தாக்களைச் செப்பனிடுதல்.
3. ரஸ்தாக்களின் ஓரங்களில் மரங்கள் வைத்து வளர்த்தல்.
4. ஆஸ்பத்திரி ஏற்படுத்தல்.
5. சத்திரம் கட்டுதல்.
6. ஆடு, மாடு கொல்லுமிடம் கட்டுதல்.
7. வண்டிப்பேட்டை ஏற்படுத்தல்.
8. கக்கூஸ்களைக் கட்டுதல்.
9. சிறு பாலம், ஜலத்தொட்டி கட்டுதல்.
10. பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்திக் கட்டடங்கள் கட்டிக் கொடுத்தல்.

**(11)** லோகல் போர்டாரின் வரும்படி:—

1. வீட்டுவரி, சுங்கம்வரி, பந்தல்வரி, லைசென்ஸ் கட்டணம் முதலியனவும், சந்தைகூடும் காலத்திலும், உற்சவ காலத்திலும், வண்டிப் பேட்டைகளையும், மற்ற பொது இடங்களையும் நகர் ஜனங்கள் உபயோகிப்பதற்காக விதிக்கும் சொற்ப கட்டண முதலியனவுமாம்.

**(12)** சென்னை ராஜதானியில் உள்ள டிஸ்டிரிக்ட் போர்டு, தாலூகா போர்டு, யூனியன் மொத்தம்:—

29-டிஸ்டிரிக்ட் போர்டுகளும், 82-தாலூகா போர்டுகளும், 380-யூனியன்களும் இருக்கின்றன.

**(13)** முனிசிபாலிட்டி என்பது:—

ஒரு பட்டணத்தின் ஜனத்தொகை, அதன் வரும்படி, நாகரிகம், அதிகப்படிப்பாளிகள், தனவான்கள் இவர்கள் அதிகமாயிருக்கிறதைப் பார்த்துக் கவர்ன்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட ஓர் நகர பரிபாலன சங்கத்திற்கு 'முனிசிபாலிட்டி' என்று பெயர்.

**(14)** கவர்ன்மெண்டார் ஏற்படுத்தி இருப்பதின் நோக்கம்:—ஜனங்களின் சௌகரியத்திற்காக இப்படி ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

**(15)** முனிசிபாலிட்டியில் வேலை பார்ப்பவர்கள்:—

1. சேர்மன்.
2. மானேஜர்.
3. கௌன்ஸிலர்கள்.
4. ஹெல்த்தாபீஸர்.
5. சீப்சானிட்டேரி இன்ஸ்பெக்டர்.
6. சானிட்டேரி இன்ஸ்பெக்டர்.
7. கால்ராடேட்டி இன்ஸ்பெக்டர்.
8. வாக்ஸ்நேட்டர்.
9. ஓவர்சீயர்.
10. இஞ்சினீயர்.

11. கிளார்க்கு.

12. பில்கலெக்டர்.

13. பியூன்.

14. லேட்டர்.

15. மேஸ்திரி.

16. ஒட்டன்.

17. தோட்டி.

18. தெருவுக்குத் தண்ணீர் தெளிக்கிறவர்கள்.

19. சாக்கடைக் கிளீனர்.

**(16)** முனிசிபாலிட்டியை ஊரின் விஸ்தீரணத்திற்குத் தக்கபடி அனேக வார்டுகளாகப் பிரித்திருக்கிறார்கள்.

**(17)** ஏன் அப்படிப் பிரித்திருக்கிறார்கள் என்றால்:— சுலபமாய் வேலை செய்துகொள்வதற்காக.

**(18)** முனிசிபாலிட்டிக்குத் தலைமையான அதிகாரி:- சேர்மென்.

**(19)** சேர்மேனுக்கு உதவியாயுள்ளவர்கள்:— கௌன்ஸிலர்கள்.

**(20)** கௌன்ஸிலர்கள்:—முனிசிபாலிட்டியின் ஜனத் தொகைக்குத் தக்கபடி 16 பேர் முதல் 36 பேர் வரையில் இருக்கலாம்.

**(21)** இந்தக் கௌன்ஸிலர்களைத் தெரிந்தெடுப்பவர்கள்:- சிலரை ஸ்தலசுய ஆட்சி மந்திரியும், மற்றவர்களை வரி கொடுக்கும் நகரத்தாரும் தெரிந்தெடுப்பார்கள்.

**(22)** எப்பேர்ப்பட்டவர்களைத் தெரிந்தெடுப்பார்களெனில்:- அறிவுடையோர்களையும், தனவந்தர்களையும், பரோபகாரம் செய்வதில் ஊக்கமுள்ளவர்களையும் தெரிந்தெடுப்பார்கள்.

**(23)** சேர்மென் அவர்களை நியமிப்பவர்கள்:— கௌன்ஸில் மெம்பர்கள் தங்களுக்குள் ஒருவரைத் தேர்ந்தெடுத்து நியமிப்பார்கள்.

**(24)** சேர்மென் அவர்களை ஒரு தடவை நியமித்தால் எத்தனை வருடம் வேலை பார்த்து வரலாம் எனில்:— 3-வருஷம் வேலைபார்த்து வரலாம். பிறகு புது நியமனம் ஆகவேண்டியது.

**(25)** மற்ற சிப்பந்திகளை நியமிப்பவாகள்:— சேர்மென் அவர்கள் கௌன்ஸிலர்களின் அபிப்பிராயத்தின் பேரில் நியமித்துக்கொள்ளலாம்.

**(26)** சேர்மென் கௌன்ஸிலர் மானேஜர் இவர்கள்வேலை. இவர்கள் அவசியம் உண்டானபோது மீட்டிங்கு கூடி,

1. கூரை விண்ணப்பங்கள்.
2. அனுப்பவேண்டிய நோட்டீசுகள்.
3. கட்டடங்களுக்கு லைஸென்ஸ்கள்.

4. லயன்மார்க்கு செய்ய மனுக்கள்.
5. வீடுகளுக்குப் படிகள் கட்ட மனுக்கள்.
6. கடைகளுக்குத் தட்டிகள் கட்ட மனுக்கள்.
7. வீட்டின் ஓரங்களில் பலகைபோட மனுக்கள்.
8. தொகை செல்லவேண்டிய பில்லுகள்.
9. எஸ்டி மேட்டுகள்.
10. தொகை செல்லான பில்லுகள்.
11. ரிக்கார்டு செய்யவேண்டிய பேப்பர்கள்.
12. தள்ளுபடியாகவேண்டிய வரிகள்.
13. ரத்துசெய்யவேண்டிய வரிகள்.
14. வீட்டுவரி அப்பீல்கள்.
15. நிலவரி அப்பீல்கள்.
16. வண்டிக்கு நம்பர்போட மனுக்கள்.

இப்படிப்பட்ட மனுக்களைக் கவனித்துப் பைசல் செய்ய வேண்டியது.

(27) ஹெல்த் ஆபீஸர் வேலை என்னவென்றால்:--
முனிசிபல் டவுன் முழுமையும் சுற்றிப்பார்த்துச் சுத்தமாக இருக்கும்படி ஏற்பாடும், காலரா விஷஜுரம் இவைகள் வராமல் தடுப்பதற்குத்தக்க ஏற்பாடும் செய்யவேண்டியது.

(28) சீப் சானிடேரி இன்ஸ்பெக்டர், சானிடேரி இன்ஸ்பெக்டர் இவர்கள் வேலையாவது:—
இவர்கள் பிரதிதினமும் டவுன் முழுமையும் சுற்றிப்பார்த்துச் சுத்தமாயிருக்கிறதா என்று கவனிக்கவேண்டியது.

(29) கால்ரா டேட்டி இன்ஸ்பெக்டர் வேலையாவது:—
இவருக்கு இரண்டு சேவகர்களையும், ஐந்து தோட்டிகளையும் கொடுத்திருக்கிறார்கள். இவர்கள் கால்ரா நடக்கிற

தெருவுக்குப்போய்ப் பிரேதத்தை எடுத்தவுடன் அவ்விடத்தைச் சுத்திபண்ணிக் காலரா கண்டவர்களுடைய துணிமணிகளை நெருப்பில் போட்டுக் கொளுத்திச் சாம்பராக்கிவிட்டு மருந்து தெளிக்கவேண்டியது.

(30 வாக்ஸிநேட்டர் வேலை:—

டவுனில் பிறந்திருக்கிற குழந்தைகளுக்கெல்லாம் அம்மை குத்தவேண்டியது.

(31) கிளார்க்குகளின் வேலையாவது:—

ஆபீஸில் சம்பந்தப்பட்ட எல்லாப் பேப்பர்களையும் எழுதவேண்டியது.

(32) பில் கலெக்டர் வேலையாவது:—

வரிப்பணங்களை வசூல்செய்ய வேண்டியது.

(33) பியூன் வேலையாவது:—

ஆபீஸ் உதகியோகஸ்தர்கள் சொல்லுகிறபடி ஆபிஸில் சம்பந்தப்பட்ட எல்லா வேலைகளையும் செய்யவேண்டியது.

(34) லைட்டர் வேலையாவது:—

தெருக்களில் உள்ள லாந்தர்களிலே எண்ணெய் வார்த்துத் தீபம் ஏற்ற வேண்டியது.

(35) மேஸ்திரி வேலையாவது:—

தெருக்களிலும், கக்கூசுகளிலும் வேலை செய்கிறவர்கள் சுத்தமாய் வேலை செய்யும்படி கவனிக்கவேண்டியது.

(36) ஒட்டனுடைய வேலையாவது:—

கக்கூசுகளிலுள்ள மலங்களையும், இதரஸ்தானங்களிலுள்ள மலங்களையும் எடுத்துச் சுத்தம் செய்ய வேண்டியது.

(37) தோட்டியின் வேலை:—தெருக்களிலுள்ள குப்பைகளைக் கூட்டி அள்ளி, வண்டியில் போட்டுக் கொண்டு போய், ஊருக்கு அப்பால் கொட்டவேண்டியது.

(38) தண்ணீர் தெளிக்கிறவன் வேலை:—காலையிலும், மாலையிலும் தெருக்களில் தூசி மண் கிளம்பாமல் தண்ணீர் தெளிக்கவேண்டியது.

(39) சாக்கடைக் கிளீனர் வேலை:—

தெருக்களில் இரண்டு பக்கத்திலுமுள்ள சாக்கடைகளைச் சுத்தம் செய்யவேண்டியது.

(40) தண்ணீர் இஞ்சினில் வேலைசெய்கிறவர்கள்:—

1. ஹெட் டிரைவர்.
2. அஸிஸ்டெண் டிரைவர்.
3. பிட்டர்.
4. ஸ்டோக்கர்.
5. கிளீனர்.
6. பயர்மேன்.
7. ரோஸ்கூலி.
8. சேனல் கூலிஸ்.
9. மேஸ்திரி.

(41) டவுன் உள்ளே வேலைசெய்கிறவர்கள்:—

1. இஞ்சினீர்.
2. வாட்டர் ஒர்க்கு ஓவர்சியர்.
3. பிட்டர்.
4. கிளீனர்.

(42) முனிசிபாலிட்டிக்கு வரும் வரும்படிகள்:—

1. டோல்கேட்டுவரி.
2. தொழில்வரி.
3. வீட்டுவரி
4. தண்ணீர்வரி.
5. சாக்கடைவரி.
6. வில்வண்டி, சாதாரணவண்டி, ஸைக்கில், ஜட்காவண்டி இவைகளின் வரி.
7. கக்கூசுவரி.

8. பந்தல்வரி
9. சந்தை, மார்க்கட்டு வரி.
10. குப்பை விற்றபணம்.
11. மலம் விற்றபணம்.
12. மாடு, குதிரை முதலிய மிருகங்களின் வரி.

(43) இப்படி வசூலாகிற பணத்திற்குச் செலவுகள்:—

1. தெருக்கள், பாலங்கள், வைத்தியசாலை, சந்தை, மார்க்கட்டு, கசாப்புக்கடை, ஜலதாரை, சத்திரம் இவைகள் கட்டுதல், ரிப்பேர் செய்தல்.

2. அம்மை குத்துவதற்கும், சுகாதாரவிதிகளை அனுஷ்டிக்கச் செய்வதற்கும் உத்தியோகஸ்தர்களை நியமித்தல்.

3. ஜனனமரணக் கணக்கு வைத்தல்.

4. தண்ணீர் குறைவின்றிச் சப்ளைசெய்தல்.

5. தெருக்கள்தோறும் விளக்குப் போடுதல்.

6. ஜலதாரை, கக்கூசு இவைகளை அடிக்கடி ரிப்பேர் செய்தல்.

7. ரோட்டுகளில் மரங்களை இரண்டு பக்கத்திலும் வைத்துப் பயிர்செய்தல், பூந்தோட்டங்களையும் விருத்தி பண்ணுதல்.

8. விசேஷமாய்ப் பிரதம படிப்பையும், சகண்டரிப் படிப்பையும் விருத்தி பண்ணல், அவைகளுக்கு வேண்டிய பள்ளிக்கூடங்களைக் கட்டுதல்.

9. சர்க்கார் நிலத்தில் கட்டடங்களை முன் தள்ளிக் கட்டாமல் பார்த்துக்கொள்ளல்.

10. பெரிய பட்டணங்களாயிருந்தால் தெருக்களின் பெயரை நோட்டீஸ் போர்டில் போட்டு, அத்தெருக்களில் அனைவருமறிய ஒரு பகிரங்கமான இடத்தில் அடித்தல்.

11. வீடுகளுக்கும், வண்டிகளுக்கும் நம்பர்கொடுத்தல்.

12. அபாயகரமான, பழய கட்டடங்களை இடித்தல்.

13. தோல்கிடங்கு, சாயச்சாலை, வெடிமருந்துச் சாலை, தொழிற்சாலை இவைகளைப் பட்டணத்திற்கு வெளியே இருக்கும்படி செய்தல்.

14. வண்டிப்பேட்டை, பௌண்டுப்பேட்டை, கொலைக்களம் இவைகள் கட்டுதல்.

15. வாந்திபேதி, கொள்ளைநோய் இவைகள் வராமல் இருக்கும்படி தகுந்த ஏற்பாடு செய்தல்.

16. குப்பைகள் போடுவதற்கும், சுடுகாடு அமைப்பதற்கும் தகுந்த இடம் ஏற்படுத்தல்.

17. சுகாதார விதிகளை மீறி நடக்கிறவர்களைத் தண்டிக்கப் போலீஸ்காரர்கள் முனிஸிபல் சேர்மெனுக்கு உதவிபுரிதல் முதலியனவாம்.

(44) முனிசிபாலிடியார் நமக்காகத் தினந்தோறும் செய்யும் வேலைகள்:—

1. தண்ணீர் சப்ளை செய்தல்.

2. இராக்காலத்தில் வீதியில் விளக்குப்போடுதல்.

3. தெருக்கள், கக்கூஸ்களைச் சுத்தம் செய்தல்.

## 9-ஆவது அதிகாரம்.

## ரெவினியூ டிபார்ட்மெண்டு.

பீடிகை:—முற்காலத்தில் அரசாண்ட சுதேச ராஜாக்கள் நிலங்களுக்குச் சொந்தக்காரரா யிருந்து, தன் குடிகளைச் சாகுபடி செய்யச்சொல்லி, அரசிறை வாங்கிவந்தார்கள். அந்த அரசிறை சரியாய்க் கொடுக்காவிட்டால் வெயிலில் நிற்க வைக்கிறதும், குனிய வைக்கிறதுமாய்த் தண்டனை செய்து வந்தார்கள். அந்த வரியையும் அடுத்த வருஷத்தில் சேர்த்து, வசூல் செய்து விடுவார்கள். ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆளவந்தபோது சுதேச இராஜாக்கள் வசூல் செய்ததற்கும் குறைந்ததாகவே வசூல் செய்து வந்தார்கள். அதையும் குறைக்கவேண்டும் என்று சென்ற நூற்றுண்டின் மத்தியில் பூமியைச் சரிவர அளந்து, பூமியின் தரத்துக்குத் தக்கபடி தீர்வை நிர்ணயித்தார்கள். அதை வசூல் செய்ய அநேக உத்தியோகஸ்தர்களை நியமித்தார்கள். அந்த உத்தியோகஸ்தர்களுக்கு ரெவினியூ அதிகாரிகள் என்று பெயர்.

**(1)** ரெவினியூ என்றால்:—நிலங்களுக்குத் தீர்வைவசூல் செய்வது. கள், சாராயம், உப்புக்குத்தகை முதலியவைகளுக்கு ரெவினியூ என்று பெயர்.

**(2)** பூமிவரிகள்:—ஜமீன்வரி, இனும்வரி, தரவாரிவரி என மூன்று வகைப்படும்.

**(3)** ஜமீன் வரி என்பது:—ஒரு கிராமம், அல்லது அநேக கிராமங்களை ஜமீந்தார் என்ற ஒருவரிடத்தில் சாஸ்வதத் தீர்வைக்கு ஒப்படைத்து, அவரிடமாக ஷை கிராமத்தின் நிலங்களின் வரியை மொத்தமாய் வசூலித்தல்.

(4) இனும் வரி என்பது:—முன் இந்தியா இராஜாக்கள் தங்களுக்குச் சிலர் செய்த உபகாரத்திற்காகவும், ஆலயங்களுக்காகவும் நிலங்களைத் தீர்வை யில்லாமல் இனமாக விட்டிருந்தார்கள். அந்த நிலங்கள் எதற்காக விடப்பட்டனவோ அக்காரியத்திற்குச் சரியாய் உபயோகப்பட்டு வராத பக்ஷத்தில் அந்த நிலங்களுக்குத் தரவாரி வரி ஏற்படுத்தி வசூலிக்கிறார்கள். இப்படி வசூலிக்கப்படும் வரிக்குத்தான் இனும் வரி என்று பெயர்.

(5) தரவாரி வரி வசூலிக்கப்படும் விதம்:—இது ஒவ்வொரு பட்டாதாரரும் தாம் பயிர் செய்யும் நிலத்துக்குக் கொடுக்கவேண்டிய தீர்வை. பொதுவாய் இது மாசூலின் விவசாயச் செலவுகள் போக மீதியாயுள்ளதில் பாதிக்கு அதிகப்படாமல் வசூலிக்கப்படுகிறது.

1. பாக்கி வரியை வசூல்செய்ய அசையும் பொருளையாவது, அசையாப் பொருளையாவது தாசில்தாரின் உத்தரவின்மேல் ஜப்தி செய்யவும், அதை விற்பனை செய்யவும் அதிகாரம் உண்டு.

2. புலங்களில் எல்லைக் கற்கள் சரியாய் இருக்கின்றனவா என்பதைக் கவனித்தல்.

3. லோக்கல் யூனியன் எல்லைக்குள்ளே இருக்கிற வீடுகளின் வரியை வசூல் செய்வதற்கு உதவி செய்தல்

4. கால் நடைகளின் பவுண்டின் கணக்கு வைத்தல்.

5. சர்க்கார் மரங்களை யாரும்வெட்டாதபடி பார்த்துக் கொள்ளல்.

6. உப்பளங்களில் யாரும் திருட்டுத்தனமாய் உப்புச் செய்யாதபடி பார்த்துக் கொள்ளல்.

(6) வரிவசூல் செய்யும் ரேவினியூ உத்தியோகஸ்தர்கள்:-

1. கிராமமுனிசிப்.
2. ரெவினியூ இன்ஸ்பெக்டர்.
3. தாசில்தார் (டிப்டி தாசில்தார்.)
4. டிப்டிகலெக்டர் அல்லது டிவிஷனுபீஷர்.
5. அஸிஸ்டெண்டு கலெக்டர்.
6. ஹெட் அஸிஸ்டெண்டு கலெக்டர்.
7. சப் கலெக்டர்.
8. டிஸ்டிரிக்ட் கலெக்டர்.

(7) கிராமமுனிசீப் ரேவினியூ விஷயமாய்ச் செய்யும் வேலை:—நன்செய், புன்செய் நிலங்களுக்குத் தீர்வைவசூல் செய்து, தாலூகா கஜானாவுக்கு அனுப்புதல்.

(8) ரேவினியூ இன்ஸ்பெக்டர் வேலை:—

1. சாகுபடியான நிலங்களைச் சுற்றிப்பார்ப்பது.

2. கண்மாய், ஆறுகள், குளம் கெட்டுப் போகாமல் பார்த்துக்கொள்வது.

3. கிராமத்திலுள்ள கணக்குகளைச் சரி பார்ப்பது.

4. நிலங்கள் சாகுபடி சாவியாய்ப்போகுதலை நேரில் பார்த்து மேலதிகாரிகளுக்கு ரிப்போர்ட்டு செய்வது.

(9) தாசில்தார் வேலை:—

1. தீர்வைப் பணம் சரியாய் வசூலாகிறதா என்று பார்த்துக் கொள்வது.

2. வசூலான பணம் கஜானாவில் சரியாய் இருசால் செய்யப்படுகிறதா என்று பார்த்துக்கொள்வது.

3. கீழ் அதிகாரி வேலைகளைத் தனிக்கை செய்வது.

**(10)** டிப்டிகலெக்டர் அல்லது டிவிஷனுபீசர்வேலை:— 2 அல்லது 3 தாலூக்காக்கள் முழுவதிலுமுள்ள கிராம உத்தியோகஸ்தர்கள், ரெவினியூ இன்ஸ்பெக்டர்கள், தாசில்தார்கள், இவர்களுக்கெல்லாம் மேலான அதிகாரி. இவர் அடிக்கடி தம் டிவிஷனிலுள்ள கிராமங்களைச் சுற்றிப் பார்ப்பதும், பாடசாலை, சுகாதாரம், மராமத்து முதலிய குடிகளுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்வதும் குடிகளுக்கு மாசூல் விஷயமாய் நேரிட்ட கஷ்ட நஷ்டங்களை ஜமாபந்திக் காலத்தில் கவனித்துப் பைசல் செய்வதும் புதுப்பட்டாக்களைக் கொடுப்பதும் அவருடைய கடமை. தனக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர்களை நீக்கவும், நியமிக்கவும் அதிகாரமுண்டு.

**(11)** அஸிஸ்டெண்டு கலெக்டர், ஹெட்அஸிஸ்டெண்டு கலெக்டர், ஸப்கலெக்டர், டிஸ்டிரிக்ட்கலெக்டர் இவர்கள் வேலை:—

1. தன்னுடைய ஜில்லாவிலுள்ள ரெவினியூ சம்பந்தமான கேஸ்களை விசாரித்துத் தீர்ப்புச் செய்வது.

2. தன்னுடைய ஜில்லாவுக்குள் கலகங்கள், சண்டைகள் முதலியவைகளை விசாரித்துத் தீர்ப்புச் செய்வது.

3. படிப்பு விஷயமாய்ப் பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர்களுக்கு உதவி செய்வது.

4. போலீசாரின்வேலையைமேற்பார்த்து அவருடைய ஜில்லா அமரிக்கையா யிருக்கப் பார்த்துக் கொள்வது.

5. வியாதி முதலியவைகளைப் பரவவிடாமல் தடுக்க வேண்டிய வழிகளைக் கவனிக்கும்படி அந்தந்தக் காலங்களில் ஜில்லா டாக்டருக்குத் தெரியப் படுத்துவது.

## 10-வது அதிகாரம்.
## சால்ட் அண்ட் ஆப்காரி.

---

பீடிகை:—முற்காலத்தில் அரசு செய்த அரசர்கள் காலத்தில் சால்ட் அண்ட் ஆப்காரி டிபார்ட்மெண்ட் கிடையாது. இது ஆங்கிலேயர் அரசாட்சி காலத்தில் ஏற்பட்டது. இதில் உப்பு, கள், சாராயம், கஞ்சா, அபின் இவைகளினால் சர்க்காருக்கு வரும்படி உண்டு. மேற்படி சரக்குகளை விற்பவர்கள் லைசென்ஸ் பெறவேண்டும். இதற்கு அநேக உத்தியோகஸ்தர்களை நியமித்திருக்கிறார்கள். இந்த உத்தியோகஸ்தர்களுக்கு சால்ட் அண்ட் ஆப்காரி உத்தியோகஸ்தர்கள் என்று பெயர்.

**(1)** சால்ட் அண்ட் ஆப்காரி ஏற்பட்டதின் நோக்கம்:—கள்ள உப்பு உற்பத்தி செய்வதும், லைசென்ஸில்லாமல் சாராயம் இறக்குமதி செய்வதும், கள், கஞ்சா, அபின் முதலியவைகள் விற்பதும் முதலிய குற்றங்கள் செய்யாமல் இருப்பதற்காக ஏற்படுத்தப்பட்டது.

**(2)** சால்ட் அண்ட் ஆப்காரி உத்தியோகஸ்தர்கள்:—

1. பியூன்.
2. பெட்டி ஆபீஸர்.
3. சப் இன்ஸ்பெக்டர்.
4. அஸிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர்.
5. இன்ஸ்பெக்டர்.
6. அஸிஸ்டெண்டு கமிஷனர்.
7. கமிஷனர்.

**(3)** சால்ட் பியூன் வேலை:—ஆப்காரி சம்பந்தமான குற்றங்களைக் கண்டுபிடிக்கவேண்டியது.

**(4)** பெட்டி ஆபீஸர் வேலை:—சால்ட் பியூன்கள் செய்கின்ற வேலைகளை மேற்பார்வை பார்க்க வேண்டியது.

(5) சப் இன்ஸ்பெக்டர் வேலை:—கள்ளுக்கடை, சாராயக்கடை, கஞ்சாக்கடை, அபின்கடை முதலியவைகளை அப்போதைக் கப்போது பரிசீலனை செய்யவும், மற்றும் அந்த இலாகா சம்பந்தமான கேஸ்களை நடத்தவும் வேண்டியது

(6) எந்தெந்த மரங்களில் கள் இறக்கச் சர்க்கார் உத்திரவு எனில்:—தென்னை, பனை, ஈஞ்சு முதலிய மரங்களிலிருந்து கள் இறக்கலாம். சர்க்காரால் நம்பர் போட்ட மரங்களில் இறக்கவேண்டும். நம்பர் போடாத மரங்களில் கள் இறக்கினால் தண்டனை உண்டு.

(7) லாகிரி வஸ்துக்கள் எல்லாம் யாருடைய உத்திரவின்பேரில் விற்க வேண்டும் என்றால்:—சர்க்காருடைய உத்திரவின் பேரில் விற்கவேண்டும். அந்த உத்திரவுக்கு லைசென்ஸ் என்று பெயர். லைசென்ஸ் பெறவேண்டுமானால் சர்க்காருக்குக் கொஞ்சம் கட்டணம் செலுத்தவேண்டும். வியாபாரம் செய்கிறவர்கள் லைசென்ஸ் கட்டின தொகையைச் சரக்கின் விலையில் சேர்த்து வசூலித்து விடுவார்கள்.

(8) சர்க்காரால் இதற்கு லைசென்ஸ் பெறவேண்டுமென்றும், வரிசெலுத்த வேண்டுமென்றும் ஏற்படுத்தியதின்நோக்கமென்னவெனில்:—லாகிரி வஸ்துக்கள் இலகுவாயும், விலை சகாயமாயும் கிடைக்கும் பக்ஷத்தில் ஜனங்கள் அதிகமாய் உபயோகித்துக் கெட்டுப்போய் விடுவார்களென்று இவ்வித ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள்.

(9) அஸிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர், இன்ஸ்பெக்டர் அஸிஸ்டெண்ட் கமிஷனர், கமிஷனர் இவர்களுடைய வேலை:—இவர்கள் பொதுவாய் அவரவர்களுக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர்களின் வேலைகளையும், அதுசம்பந்தமானவையும் சரிபார்க்கவும் கடமைப்பட் டிருக்கிறார்கள்.

## 11-ஆவது அதிகாரம்.

## காட்டிலாகா அதிகாரம்.

---

பீடிகை:—பூர்வகாலத்தில் இந்தியாவைப் பல பிரிவுகளாகப் பிரித்துச் சுதேச இராஜாக்கள் ஆண்டு வந்தார்கள். ஒரு பிரிவிற்கும் வேறொரு பிரிவிற்கும் காடுகளையே எல்லைகளாக அமைத்திருந்தார்கள். அக்காடுகளில் ஏராளமாய்த் துஷ்ட மிருகங்களிருக்கும். அவைகளை வேட்டையாட இராஜாக்கள் காட்டுக்குப் போவதுண்டு. காடுகளால் இத்தேசத்திற்கு அதிகப் பிரயோஜனங்கள் இருந்தன. காடுகளில் மரம், செடி, புல், பூண்டு முதலியவை அடர்ந்திருந்ததால் பூமி வரட்சியடையாமல் குளிர்ந்திருக்க இடமிருந்தது. மரங்களின் வேர்கள் ஜலத்தை உறிஞ்சும் சுபாவத்தை யுடையவையாதலால், பூமிமட்டத்திற்குக் கீழே எப்பொழுதும் ஈரமாகவே இருந்துகொண்டிருக்கும். இதனால் ஊற்றுக்கள் உண்டாவதற்கு இடமிருந்தது. இக்காடுகளின் குளிர்ந்த தன்மையால் மேகங்கள் குளிர்ந்த காற்றைப்பெற்று அடிக்கடி மழை பெய்துகொண் டிருந்தன. கிறிஸ்து பிறப்பதற்குச் சுமார் 2000 வருஷத்திற்கு முன் இந்தியாவிற்குள் அநேகம்பேர் குடியேறினார்கள். திராவிடர், ஆரியர், பாரசீகர், கிர்க்கர், மகம்மதியர் டச்சுக்காரர் தானியர், பிராஞ்சுக்காரர், கடைசியில் ஆங்கிலேயர் ஆகிய பல ஜாதியார் வந்து கூடினார்கள். இவ்வாறு குடிகள் அதிகரிக்க இடமும் அதிகமாய் வேண்டியிருந்தது. இதனால் காடுகளை அழித்து, இடம் உண்டாக்கிக் கொண்டார்கள். காடுகளை அழிக்கவும் மழையும் குறைந்துவிட்டது. இதை அறிந்து, சர்க்காரால் சில காடுகளைப் பாதுகாக்க ஏற்பாடு

செய்திருக்கிறார்கள். இந்தக் காடுகளைப் பாதுகாக்கும் டிபார்ட்டுமெண்டுக்குக் காட்டிலாகா என்று பெயர்.

(1) காட்டிலாகா என்பது:—மலைகளிலும், மற்ற சமவெளிகளிலும் இருக்கப்பட்ட மரங்கள் அடர்ந்த காடுகள் அழிந்துபோகாதபடி பார்த்துக் கொள்வதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் டிபார்ட்மெண்டுக்குக் காட்டிலாகா என்று பெயர்.

2 இந்த ராஜதானியிலுள்ள காட்டிலாகாவை:—வடசர்க்கிளென்றும், மத்திய சர்க்கிளென்றும், தென்சர்க்கிளென்றும் பலபிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள்.

(3) ஒவ்வொரு சர்க்கிளுக்கும் தலைமை யதிகாரி:—பாரஸ்ட் கன்ஸர் வேட்டர்.

(4) ஒவ்வொரு சர்க்கிளும்:— பல ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

(5) ஒவ்வொரு ஜில்லாவிற்கும் மேல் அதிகாரி:—பாரஸ்ட் ஆபீஸர்.

(6) ஒவ்வொரு ஜில்லாவையும்:—பல ரேஞ்சுகளாகப் பிரித்திருக்கிறார்கள். ஒவ்வொரு ரேஞ்சுக்கும் அதிகாரி ரேஞ்சர்.

(7) ரேஞ்சாகளுக்குட்பட்ட உத்தியோகஸ்தர்கள்:—பாரஸ்டர்கள், கார்டுகள்.

(8) காட்டிலாகா உத்தியோகஸ்தர்கள்:—

1. வாச்சர்
2. கார்டு.
3. பாரஸ்டர்.
4. டிப்டி ரேஞ்சர்.
5. ரேஞ்சர்.
6. அஸிஸ்டெண்ட் பாரஸ்ட் ஆபீஸர்.
7. டிஸ்டிரிக்ட் பாரஸ்டர்.
8. பாரஸ்ட் கன்ஸர் வேட்டர்.

(9) இவர்களுடைய வேலை யென்னவென்றால்:—

1. ஜனங்கள் காடுகளில் நெருப்பு மூட்டிச் செடிகளையும், மரங்களையும் அழிக்காமல் பார்த்துக் கொள்வது.

2. லைஸென்ஸ் இல்லாது மரங்களையும், செடிகளையும் வெட்டாமல் பார்த்துக் கொள்வது.

3. லைஸென்ஸ் இல்லாது ஆடுமாடுகளை மேய்க்க விடாமல் பார்த்துக்கொள்வது.

4. வயல்களுக்குத் தழைகள் கொடுப்பது.

5. லைஸென்ஸின் பேரில் ஆடுமாடுகளை மேய்க்க அனுமதி கொடுப்பது.

(10) காட்டிலாகாக்களினால் உண்டாகும் நன்மையாவது:-

1. காடுகளில் உண்டாகும் இலை தழைகளால் தோட்டங்களுக்கும், வயல்களுக்கும் நல்ல உரம் கிடைக்கிறது.

2. மரமடர்ந்த இடங்களில் குளிர்ச்சி அதிகமாய் இருப்பதால் நீராவி கலந்த ஆகாயம்வரும்போது குளிர்ச்சி பட்டு, மழை அதிகமாய் வருஷிக்கும்.

3. அக்காடுகளுக்குள் ஈரம் அதிகமா யிருப்பதினால் பக்கங்களில் வெட்டப்படும் கிணறுகளுக்கு நல்ல ஊற்று உண்டாகிறது.

4. மேன்மையான உத்திரங்கள், சாயஇலைகள், மருந்துக்கு வேண்டிய சாமான்கள் முதலியவைகள் கிடைக்கும்.

## 12-ஆவது அதிகாரம்.

## D. P. W.

## மராமத்து இலாகா.

---

பீடிகை:-பூர்வகாலத்தில் இந்தியாவைப்பல பிரிவுகளாகச் பிரித்துச் சுதேச ராஜாக்கள் ஆண்டுவந்தார்கள். அப்பொழுது ஜனங்கள் ஓர் ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப் போகிறதா யிருந்தால் மகா கஷ்டம். அந்தக் காலத்தில் ரோட்டுகள், பாலங்கள், சத்திரம், கிணறுகள், குளங்கள் இவைகள் ஒன்றும் கிடையாது. இப்பொழுது ஆங்கில அரசாட்சிகாலத்தில் நமக்குவேண்டிய சகல காரியங்களும் செய்துகொடுத் திருக்கிறார்கள். அப்படிச் செய்ய ஏற்பட்டிருக்கும் டிபார்ட்மெண்டுக்குத் தான் மராமத்து இலாகா என்று பெயர்.

(1) மராமத்து இலாகா என்பதாவது:—பொது ஜனங்களுக்கு அவசியமான சர்க்கார் கட்டடங்கள், ரஸ்தாக்கள், பாலங்கள் முதலியவைகளைக் கட்டவும், பழுது பார்க்கவும் சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் டிபார்ட்மெண்டுக்கு மராமத்து இலாகா என்று பெயர்.

(2) மராமத்து இலாகா உத்தியோகஸ்தர்கள்:—

1. மேஸ்திரி.
2. சப் ஓவர்ஸியர்.
3. ஓவர்ஸியர்.
4. சூப்பர் வைஸர்.
5. சப் இஞ்சினீயர்.
6. அஸிஸ்டெண்ட் இஞ்சினீயர்.
7. எக்ஸ்க்யூட்டிவ் இஞ்சினீயர்.
8. சூப்பிரன்டெண்டிங் இஞ்சினீயர்.
9. சீப் இஞ்சினீயர்.

(3) இந்த ராஜதானியை ஆறு சர்க்கிள்களாகப் பிரித்திருக்கிறார்கள்.

(4) ஒவ்வொரு சர்க்கிளும் சூப்பிரண்டெண்டிங் இஞ்சினீயர் வசத்தில் இருக்கிறது.

(5) இவரின் அடுத்த அதிகாரிக்கு எக்ஸ்க்யூடிவ் இஞ்சினீயர் என்று பெயர். இவர் ஒரு டிவிஷன் சார்ஜில் இருப்பார்.

(6) ஒரு டிவிஷனில் 2 ஜில்லாக்கள் சேர்ந்திருக்கும்.

(7) இவருக்கு உதவி:—அஸிஸ்டெண்ட் இஞ்சினீயர்.

(8) இவருக்கடுத்த கீழான உத்யோகஸ்தர்கள்:—சூப்பர்வைசர், ஓவர்ஸியர், ஸப் ஓவர்ஸியர், மேஸ்திரிகள், சில்லறை உத்தியோகஸ்தர்கள்.

(9) மேலே கண்டவர்களுடைய வேலை:- ரஸ்தாக்களைப் பழுது பார்ப்பது; புதுரஸ்தாக்கள் போடுவது; விவசாய சம்மந்தமான அநேக சிறிய பாலங்கள், பெரிய பாலங்கள் இவைகள் கட்டவேண்டியது.

(10) இந்தச்செலவுக்காகக குடிகளிடத்தில்:—நிலத்தீர்வை, ஜலத்தீர்வை, ரோட்செஸ், ரயில்வேசெஸ், முதலிய தீர்வை வாங்குவார்கள்.

(11) ஜலப்பாய்ச்சல் சம்பந்தமான அதிகாரி:-சீப் இஞ்சினீயர்.

(12) இந்த ராஜதானிக்குச் சீப் இஞ்சினீயர்:—இரண்டு பேர் இருக்கிறார்கள்.

(**13**) அவர்களின் வேலை:—ஒருவருக்கு ஜலப்பாய்ச்சல் விஷயமாய்க் கவனித்தல், மற்றொருவருக்குக் கட்டட விஷயமாய்க் கவனித்தல்.

(**14**) ஜலப்பாய்ச்சல் சம்பந்தமான விஷயங்களை:— இரண்டு வகையாய்ப் பிரித்திருக்கிறார்கள்.

(**15**) அவைகளில்:—பெரிய ஆறுகள், நதிகள், ஏரிகள், இவைகளைப்பற்றி நடக்கவேண்டிய பாலம், அணைக்கட்டு, மதகுகள், கரைபோடுதல் முதலிய வேலைகளுக்கு மேஜர் இரிகேஷன் என்று பெயர். மற்றொன்று 200-ஏக்கருக்கு மேற்படாத பிரதேசத்தைப் பாய்ச்சும் ஜல ஆதாரங்களின் சம்பந்தமான கட்டடவேலை, பழுதுபார்க்கும் வேலைகளுக்கு மைனர் இரிகேஷன் என்று பெயர்.

---

## 13-ஆவது அதிகாரம்.
## ரெயில்வே டிபார்ட்மெண்ட்.

---

பீடிகை:—பூர்வகாலத்தில் இந்தியாவில் அரசு செய்த சுதேசராசாக்கள் காலத்தில் வாயுவேகம், மனோவேகமாய் ஓடக்கூடிய ரெயில் கிடையாது. ஆனால் ஆகாயவிமானம், புஷ்பக்கூண்டு இருந்ததாகச் சொல்லுகிறார்கள். அது அவர்களுக்கு மட்டுந்தான் பிரயோஜனம் உண்டானது. அதில் 5-6 பேர்தான் ஏறிப்போகலாம். இப்பொழுது ரெயிலில் எத்தனைபேரானாலும் சொற்பச்செலவில் 500-மைல் தூரம் வாயுவேகம் மனோவேகமாய் ஒரு நாளில் போய்விடலாம். தூரதேசத்திலுள்ள சரக்குகள் முதலியன நமக்கு வரவும், நம்முடைய தேசத்தில் உண்டாகிற சரக்குகளை அன்னிய தேசங்களுக்கு அனுப்பவும் பிரயோஜனப்படுகிறது.

(**1**) ரெயில்வே டிபார்ட்மெண்ட் என்பது:—பொது ஜனங்களின் சுலபமான பிரயாணத்திற்காகவும். அந்திய நாட்டிலிருந்து சாமான்களை எளிதில் பெற்றுக்கொள்வதற்காகவும் சௌகரியப்படும் பொருட்டு ஏற்படுத்தப்பட்டிருக்கும் டிபார்ட்மெண்டுக்கு ரெயில்வே டிபார்ட்மெண்ட் என்று பெயர்

(**2**) ரெயில்வே டிபார்ட்மெண்ட் உத்தியோகஸ்தர்கள்:—1. போட்டர். 2. ஸிக்னலர். 3. ஸ்டேஷன்மாஸ்டர். 4. ரெயில்வே இன்ஸ்பெக்டர். 5. டிப்டி டிராபிக் மானேஜர். 6. டிராபிக் மானேஜர்.

(**3**) போட்டர் வேலை:—ரெயில் வண்டி வரும்பொழுது லயன்களை ஒழுங்குபடுத்தி வைக்கவும், சரக்குகளை ஏற்றவும், இறக்கவுமாய் உள்ள வேலை.

(**4**) ஸிக்னலர் வேலை:—ரெயில் அடுத்த ஸ்டேஷனுக்குப் புறப்பட்டதென்று தந்தி அடிக்கவேண்டியது. ஜனங்கள் பணம் கொடுத்துத் தந்தி அடிக்கச்சொன்னால் அடிக்கவேண்டியது.

(**5**) ஸ்டேஷன்மாஸ்டர் வேலை:—ரெயிலில் பிரயாணம் செய்பவர்களுக்கு டிக்கட்கொடுத்தும், மற்ற சௌகரியங்களைச் செய்தும் வரவேண்டியது.

(**6**) ரெயில்வே இன்ஸ்பெக்டர் வேலை:—

இருப்புப்பாதைக்கும், கட்டடங்களுக்கும் யாதொரு சேதமும் நேரிடாமல் மேற்பார்வை செய்துவர வேண்டியது.

(7) டிராபிக்மானேஜர், டிப்டி டிராபிக்மானேஜர் இவர்கள் வேலை:—ரெயில்வே சம்பந்தப்பட்ட மட்டில் சமஸ்த விஷயங்களையும் மேற்பார்வை செய்வதோடு, பிரயாணிகளின் சௌகரியங்களுக்கடுத்த காரியாதிகளைக் கவனித்து வருவதும் அவர்களுடைய வேலை.

(8) இருப்புப்பாதைவண்டி என்பது:—

இருப்புப்பாதையின்மேல் பல வண்டிகள் ஒரு இயந்திரத்தில் இழுக்கப்பட்டு ஓடுவது இருப்புப்பாதை வண்டி.

(9) இருப்புப்பாதைவண்டி நடத்துவதற்கு வேண்டியவை:—இருப்புப்பாதை, ரெயில்வே ஸ்டேஷன், வண்டிகள், இயந்திரம்.

(10) இயந்திரம் என்பது:—உருளையாக நீண்டிருக்கும் மிகப்பெரிதான இரும்புக்குழாய். இதை இருப்புப்பாதை இயந்திரம் என்று சொல்லப்படும்.

(11) இயந்திரம் ஓடுவதற்கு வேண்டிய பொருள்கள்.—தண்ணீர், நிலக்கரி, கட்டை, நெருப்பு, பாதை.

(12) இயந்திரம் ஓடுகிற விதமாவது:—

இயந்திரத்திலுள்ள தீ எரிந்து, தண்ணீர் கொதிக்கும் பொழுது அதிலிருந்து நீராவி கிளம்பிக் குழாய் வழியாய்ப் போகும். அப்பொழுது அதி விசையாய்ச் சக்கரத்தோடு இணைக்கப்பட்டுக் குழாயிலிருக்கும் ஒரு இருப்புத்தடியை மேலும் கீழுமா யுதைக்கும். தடி உதைக்கப்பட்டதும் அது சக்கரத்தை உதைக்கச் சக்கரம் சுழல இயந்திரமும் ஓடத்தொடங்கும்.

(13) வண்டித்தொடர் என்பது:—வண்டிகளை 10 முதல் 30-வரையில் ஒன்றோடொன்று சங்கிலிகளால் கோர்வையாய்க் கோர்க்கப்பட் டிருப்பது வண்டித் தொடர்.

**(14)** வண்டித்தொடர் ஓடுகிற விதமாவது:—

இயந்திரத்துடன் வண்டித்தொடர் சங்கிலியால் கோர்க்கப் பட்டிருப்பதால் அது ஓடும்பொழுது வண்டிகளும் இழுக் கப்பட்டு எல்லாம் ஓடுகின்றது.

**(15)** வண்டித்தொடர் ஓட்டுகிறவர்:—

இயந்திர வண்டியில் உள்ள டிரைவர், பயர்மேன், கிளீனர் இவர்கள், கடைசி வண்டியில் கார்டு என்று ஒருவர் இருப்பார். அவரே வண்டிமுழுமைக்கும் பொறுப்பாளி. அவர் உத்திரவின் பேரில்தான் டிரைவர் ஓட்டுவார்.

**(16)** வண்டித்தொடர் நிற்கும் இடமும் காலமும்:—

ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ஜனங்கள் ஏறவும், இறங்கவும் எவ்வளவு நேரம் வேண்டுமோ அவ்வளவு நேரம் அதாவது 5-நிமிஷம் முதல் 10, 15-நிமிஷம் வரையில் நிற்கும்.

**(17)** இறக்குமதி, ஏற்றுமதிவேலை செய்கிறவர்கள்:—

கார்டு சொல்லுகிற சாமான்களை இறக்கவும், ஸ்டேஷன் மாஸ்டர் சொல்லுகிற சாமான்களை ஏற்றவும், போர்ட்டர் கள் வேலை செய்யவேண்டியது.

**(18)** ஜனங்களையும், சாமான்களையும் ஏற்றுகிற வித மாவது:—ஜனங்கள் போகவேண்டிய ஊர்களுக்குரிய சட் டணத்தைப் பெற்று, டிக்கெட் கொடுத்துச் சாமான்களை நிறுத்து, நிறைக்குத் தக்கபடி போகவேண்டிய ஊருக் குக் கட்டணம் வாங்கிக்கொண்டு, ரசீது கொடுப்பார் கள். இறக்குகிற இடத்தில் (ஸ்டேஷனில்) டிக்கட்டையும், சாமான் ரசீதையும் வாங்கிக்கொண்டு அனுப்புவார்கள்.

**(19)** டிக்கட்டின் கட்டணம் எப்படி யெனில்:—ஜனங்களுக்கு முதல்வகுப்பு வண்டிக்கு மைல் ஒன்றுக்கு அணா 2-வீதமும், இரண்டாவது வகுப்பு வண்டிக்கு மைல் ஒன்றுக்கு அணா 1, பைஸ் 3 வீதமும், மூன்றும் வகுப்பு வண்டிக்கு மைல் ஒன்றுக்கு 5-பைஸ் வீதமும், (லோக்கல்) அதாவது சிறிய ஸ்டேஷன்களிலும் நின்று, சாதாரணமாய்ச் செல்லும் வண்டிக்கு மைல் ஒன்றுக்கு 4-பைஸ் வீதமும் கட்டணம் வசூலிப்பார்கள். குழந்தைகளுக்கு 3 வயதுக்குமேல் 12 வயது வரையில் அரைச் சார்ஜ். இந்த ஈவுக்குமேல் யாத்திரைவரி டிக்கட் ஒன்றுக்கு அணா ஒன்று வீதம் சேர்த்து வசூலிப்பார்கள்.

**(20)** இந்த ரயில்வே டிபார்ட்மேண்டை நடத்துகிறவர்கள்:—கம்பெனியார்களால் சில இருப்புப்பாதைகளும், கவர்ன்மெண்டாரால் சில இருப்புப்பாதைகளும், டிஸ்டிரிக்ட் போர்டாரால் சில இருப்புப்பாதைகளும், சுதேச ராஜாக்களால் சில இருப்புப்பாதைகளும் நடத்தப்பட்டுவருகின்றன.

---

## 14-வது அதிகாரம்.

## வைத்திய சுகாதார இலாகா.

---

பீடிகை:—பூர்வகாலத்தில் அரசாண்ட இராஜாக்கள் பெரும்பாலும் தங்களுடைய சௌகரியத்தை நாடி அரசு செய்தார்களேயொழிய, ஜனங்களின் வசதியையும், சுகத்தையும் கவனித்தவர்களல்ல. காருண்ய இங்கிலீஷ் கவர்ன்

மெண்டார் ஜனங்களின் சுகத்தைத் தங்களது சுகத்தைப் போலவே மதித்துத் தரும ஆஸ்பத்திரிகளை நியமித்து, யாவருக்கும் பயன்படுமாறு செய்திருக்கிறார்கள்.

**(1)** எத்தனை விதமான ஆஸ்பத்திரிகள் எனில்:—

1. வியாதியஸ்தருக்கு வியாதி நீங்குகிற வரையில் இடம், ஆகாரம், மருந்துகொடுக்கும் ஆஸ்பத்திரிகள்.

2. தருமமாக மருந்து மாத்திரம் கொடுக்கும் டிஸ் பென்ஸேரிகள்.

**(2)** தரும ஆஸ்பத்திரிகளில் இன்னும் சில:—

லோக்கல் போர்டுகளாலும், முனிசிபாலிட்டிகளாலும், பாதிரிமார்களாலும், சில சுதேசிகளாலும் நடத்தப்பட்டு வருகின்றன.

**(3)** சர்க்காரால் நடத்தப்பட்டு வரும் சில முக்கிய ஆஸ்பத்திரிகள்:—சென்னபட்டணத்தில் இருக்கும் ஜெனரல் ஆஸ்பிடல், குஷ்டரோகிகளுக்கு ஏற்பட்ட வைத்திய சாலை, கண்வைத்தியசாலை, பிரசவ வைத்தியசாலை முதலியவைகள்.

**(4)** மிருகங்களுக்கு வைத்தியம் செய்யும் வைத்திய சாலைக்கு வெட்டரினெரி ஆஸ்பிடல் (மிருக வைத்திய சாலை) என்று பெயர்.

**(5)** ஆஸ்பத்திரிகளின் அதிகாரிகள்:—

1. சப் அஸிஸ்டெண்ட் சர்ஜன்.
2. அஸிஸ்டெண்ட் சர்ஜன்.
3. டிஸ்டிரிக்ட் மெடிக்கல் ஆபீஸர்.
4. ரூலர் சானிடேரி இன்ஸ்பெக்டர்.

5. டிப்டி சானிடேரி கமிஷனர்.

6. ஹெல்த்தாபீஸர்.

**(6)** வைசூரி என்னும் நோய் வராதபடி தடுப்பதற்கு அம்மை குத்திக்கொள்ளவேண்டும்.

**(7)** அம்மை இலாகா ஏற்பட்டதின் நோக்கமாவது:—

வைசூரியால் அநேகஜனங்கள் சாகிறபடியால் அதைத் தடுப்பதற்கு அம்மை குத்திக்கொண்டால் வைசூரி வராதென்று கவர்ன்மெண்டாரால் கண்டுபிடித்து, அதிக திரவியம் செலவுசெய்து, ஜனங்களின் நன்மைக்காகவே இந்த இலாகாவை ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

**(8)** அம்மை இலாகா அதிகாரிகள்:—

1. வாக்ஸிநேட்டர்.
2. டிப்டி இன்ஸ்பெக்டர்.
3. வாக்ஸிநேஷன் இன்ஸ்பெக்டர்.

**(9)** வாக்ஸிநேட்டரின் வேலை:—

கிராமங்களுக்குப்போய்க் குழந்தைகளுக்கு அம்மை குத்தவேண்டியது.

**(10)** டிப்டி இன்ஸ்பெக்டரின் வேலை:—

ஒவ்வொரு கிராமங்களுக்கும்போய் அம்மை குத்தி இருக்கப்பட்ட அடையாளங்களைச் சரிபார்த்தல்.

## 15-வது அதிகாரம்.

## இராணுவ அதிகாரம்.

பீடிகை:—பூர்வகாலத்தில் இந்தியாவில் அரசாண்ட சுதேச ராஜாக்களுள் ஒற்றுமையின்றிச் சதா சண்டை போட்டுக் கொண்டு அன்னிய தேசத்தாரை உதவி கேட்டார்கள். "ஒண்டவந்த பிடாரி ஊர்ப்பிடாரியைத் துரத்திற்றும்" என்பதுபோல் மெள்ளமெள்ள அன்னிய தேசத்தார் சுதேச இராஜாக்களின் ஒற்றுமை இன்மையினாலும், புத்தி யீனத்தினாலும் இந்தியாவிற்குள் பிரவேசிக்க இடம் பெற்றார்கள். சிவாஜி, தியபுபோன்றகொடிய சுதேசத்தலைவர்களும், தக்ஸ், பிண்டாரி போன்ற வழிப்பறிக் கூட்டத்தார்களும் இந்தியாவைப் பாடாய்ப் படுத்திப் பம்பரமாய் ஆட்டிவைத்தார்கள்.

பிரிட்டிஷ் இராஜ்ய பரிபாலனத்தில் இத் துன்பங்களெல்லாம் கனவாய்ப்போயின. தற்போது எங்கும் அமரிக்கை ஏற்பட்டு, ஜனங்கள் சுகமாய் ஜீவிக்கிறார்கள். இப்போது இந்தியாவானது இவ்வளவு க்ஷேமமாய் இருப்பதற்கு முக்கியகாரணம் ஆங்கிலேயர் இந்தியாவில் ஏற்படுத்தியிருக்கிற பலவித பந்தோபஸ்துக்களேயாம். ஓர் ராஜாங்கத்தை அமரிக்கையுடன் ஆள நான்குவித உதவிகள் வேண்டும். 1. தரைவழியாய் வரும் வெளிச்சத்துருக்களை அடக்க ஓர் உதவி. 2. கடல் மார்க்கமாய் உண்டாகும் இடைஞ்சல்களை நீக்க ஓர் உதவி. 3. உள் நாட்டுக் கலகங்களை இல்லாமற் செய்ய ஓர் உதவி. 4. பிரஜைகள் எல்லோரும் இராஜவிசுவாச முள்ளவர்களாயிருத்தல் ஓர் உதவி. இந்த நால்வகை உதவிகளும் எந்த ராஜாங்கத்தி லிருக்

கின்றனவோ அந்தந்த ராஜாங்கம் சுகம் பெற்று வாழு மென்பதற்கு ஒரு சிறிதும் ஐயமில்லை.

(1) இராணுவ அதிகாரமென்பது:—

நம்தேசத்தின் மீது படை யெடுத்துவரும் சத்துருக் களை எதிர்த்து, முறியடிக்கும் பொருட்டு ஏற்படுத்தப் பட்ட இலாகா.

(2) இராணுவ அதிகாரிகளின் பெயர்களாவது:—

1. சிப்பாய். 2. நாயக். 3. அவுல்தார். 4. ஜமேதார். 5. சுபேதார். 6. சுபேதார் மேஜர். 7. கமாண்டிங் ஆபீஸர்.

(3) சிப்பாய்களின் வேலை:—

யுத்த சமயங்களில் போர்முனையில் நின்று சண்டை செய்யவேண்டியது.

(4) நாயக் வேலை:—அப்போதைக் கப்போது சிப்பாய் களை மேற்பார்த்து வருதல்.

(5) அவுல்தார் வேலை:— சிப்பாய்களுக்குச் சம்பளம் முதலியவைகளைப் பட்டுவாடா செய்தல்.

(6) ஜமேதார் வேலை:—சிப்பாய்களுக்குள் டிரில் முத லியவைகளை நடத்துவது.

(7) சுபேதார் வேலை:—பட்டாளத்தைக் கமாண்ட் பண்ணுகிறதும், சிப்பாய்களின் சம்பள ரோல்களைச் சரி பார்க்கிறதும்.

(8) சுபேதார் மேஜர் வேலை:—

சேனைகளைக் கமாண்டிங் ஆபீஸரின் உத்தரவின்மேல் வேண்டும்போது அணிவகுத்து நிற்கும்படி செய்வது.

(9) கமாண்டிங் ஆபீஸர் வேலை:—

தன்னுடைய பட்டாளத்திற்குச் சம்பந்தப்பட்டசகல காரியாதிகளையும் மேற்பார்த்தல்.

(10) இந்தியாவிலுள்ள சேனைகள் எல்லாவற்றிற்கும் மேலதிகாரி:—இந்தியா கவர்ன்மெண்டு நிர்வாக சபையில் ஒருவரான கமாண்டர் இன சீப் என்பவர்.

---

## 16-வது அதிகாரம்.
## போலீஸ் டிபார்ட்மெண்ட்.

---

பீடிகை:—இந்தியாவில் இருக்கப்பட்ட பிரஜைகள ஒருவருக்கொருவர் உபயோக முள்ளவர்களாயிருக்கவேண்டுமானல் நாட்டின் அமரிக்கை அத்தியாவசியம். அது இல்லாவிடில் குழப்பம் உண்டாய்த் தபால், தந்தி, ரெயில் இவைகள் தடைப்படும். இதுகாரணமாக ஜனங்களுடைய க்ஷேமம் குறைந்து, அசௌகரியங்கள் மேலிட்டுத் துன்பம் விளைவதற்கு எதுவாகும். ஆனது பற்றி நாட்டின் க்ஷேமத்தின் பொருட்டு, ஊரைப்பத்திரமாய்ப் பாதுகாப்பவர்கள் வேண்டியது அத்தியாவசியம். இவ்வாறு பாதுகாப்பவர்களை இரண்டுவிதமாகப்பிரிக்கலாம்.பலத்தசண்டை,பெருங் கலகம், அயல்தேசத்தாரின் தொந்தரவு இவைகள் சம்பவிக்குமானல் ஊரைப்பத்திரமாய் அச்சமயங்களில் காப்பதற்கு மிகுந்த திறமையுள்ளவர்களும், அதிக சாமர்த்தியமுள்ளவர்களும் வேண்டும். இப்படிப்பட்ட சமயங்களில் உதவிசெய்யச் சர்க்கார் அனேக வீரர்களைக் கவாத்து, துப்பாக்கி, கத்தி முதலிய தொழில்களில் பழக்கி வைத்துச் சண்டை உண்டாகும் காலத்தில் அதைத் தடுப்பதற்கு

வேண்டிய திறமையுடையவர்களாய் இருக்கச் செய்கிறார்கள். இவர்களைப் போர்வீரர்களென்றும், சிப்பாய்களென்றும் சொல்லுகிறோம். சிறு சண்டை சச்சரவு திருட்டுப் புரட்டு, சிறு கலகம் முதலியவைகளைத் தடுக்கச் சொற்ப சாமர்த்திய முடையவர்கள் போதுமானது. இதற்காகப் போலீஸ்காரர்கள் என்ற காவற்காரர்களை நியமித்திருக்கிறார்கள். சில சமயங்களில் "நரிகத்திக் கடல் முற்றிற்று" என்பதுபோலச் சிறுகலகம், சிறுசண்டை இவைகள் பெரிதாக வளர்ந்தாலும் வளரலாம். திடீரென்று சிப்பாய்களையும், பலத்த போர்வீரர்களையும் வரவழைப்பது ஒருக்கால் சௌகரியப்படாமல் போனாலும் அச்சமயங்களில் ஊரைப் பத்திரமாய்க் காக்கவும், சாதாரண காலங்களில் ஊரைக் காக்கவும் இப்போலீஸ்காரர்களைத் திறமையுள்ளவர்களாயிருக்கப் பழக்கி இருக்கிறார்கள். இவர்களுக்குக் கவாத்தும் பழக்கம் உண்டு. குதிரைச்சவாரி சிலருக்குச் செவ்வையாய்த் தெரியும். துப்பாக்கி, கத்தி, தடி இவைகளையும் உபயோகிக்க இவர்களைப் பழக்கி இருக்கிறார்கள்.

(1) போலீஸ் டிபார்ட்மெண்ட் என்பது:—

நாட்டின் அமரிக்கையைப் பாதுகாக்கும் டிபார்ட்மெண்ட்.

(2) போலீஸ்காரரென்பது:—ஊரைச் சுற்றிக் காவல் காப்பவருக்குப் போலீஸ்காரர் என்று பெயர்.

(3) போலீஸின் வகைகளாவது:—

1. டவுன் போலீஸ், 2. ரிஸர்வ் போலீஸ், 3. ப்யூனிடிவ் போலீஸ், 4. ரெயில்வே போலீஸ், 5. ஆப்காரி போலீஸ், 6. கிராமப் போலீஸ், 7. இன்டெலிஜென்ஸ் போலீஸ்.

(4) டவுன் போலீஸ்காரர்கள்:—

இவர்கள் பட்டணங்களில் இருந்து கலகம், களவு, கொலை முதலியவை நடக்காதபடி காத்துக் கொள்ளுகிறவர்கள். இவர்களுக்கு வெள்ளைச் சட்டையும், செகப்பு நிறமான தொப்பியும் உண்டு.

(5) ரிஸேர்வ் போலீஸ்காரர்கள்:—

இவர்களும் முக்கியமான பெரிய பட்டணங்களிலிருந்து பெரிய கலகங்கள், யுத்தங்கள் வராதபடி பார்த்துக் கொள்ளுகிறவர்கள். இவர்களுக்குக் காக்கி நிறமான சட்டையும், காக்கி நிறமான தொப்பியுமுண்டு.

(6) ப்யூனிடிவ் போலீஸ்:—சில இடங்களில் சில சமயத்தில் உண்டாகும் பெருங் கலகங்களையும், சண்டைச் சச்சரவுகளையும் அடக்குவதற்கு ரிசர்வ்போலீஸ் கூட்டத்திலிருந்து ஒரு பகுதியாரைக் கலகம் உண்டான இடங்களில் கொண்டுபோய் வைக்கிறார்கள். இவர்களுடைய செலவுக்கு ௸ கலகம் நடந்த இடத்தில் உள்ள ஜனங்களிடமிருந்தே வசூலிக்கப்படுகிறது. இப்படிப் பந்தோபஸ்துக்காக வைக்கப்படும் போலீஸாரைத்தான் ப்யூனிடிவ் போலீஸ் என்று சொல்லப்படுகிறது.

(7) ரேயில்வே போலீஸ் வேலை:—

இவர்கள் ரெயிலில் பிரயாணம் செய்யும் ஜனங்களுக்குள் கலகம், களவு, கொலை முதலியவை நடக்காதபடி பார்த்துக் கொள்ளுகிறவர்கள். இவர்களுக்குக் காக்கி நிறமான சட்டையும், பச்சை நிறமான தொப்பியும் உண்டு.

(8) ஆப்காரி போலீஸ் வேலை:—

இவர்கள் கள், சாராயம், உப்பு, வெடிமருந்து முதலிய

வைகளில் களவுநடவாமல் பார்த்துக் கொள்ளுகிறவர்கள். இவர்களுக்குக் காக்கி நிறமான சட்டையும், காக்கி நிறமான தொப்பியும் உண்டு.

(9) கிராமப் போலீஸ் வேலை:—

ஜனங்களுக்குத் திருடராலும் மற்ற துஷ்டர்களாலும் தொந்தரவு நேரிடாதபடி ஊரைப் பாதுகாப்பார்கள். அந்தக்கிராமங்களில் கொலை, களவு, சண்டை, சச்சரவு முதலியவைகள் நடக்காமல் பார்த்துக்கொள்வார்கள். அப்படி நடந்தால் கிராமமுனிசீப் மூலமாய்ப் போலீஸ்டேஷனுக்கு யாதாஸ்து அனுப்புவார்கள்

(10) இன்டெலிஜென்ஸ் போலீஸ் வேலை:—

இராஜத் துரோகமாய்ப் பேசுகிறவர்களையும், எழுதுகிறவர்களையும் கள்ளக் கூட்டத்தார்களையும், சர்க்கார் டிபார்ட் மெண்டுகளில் நடக்கும் திருட்டுப் புரட்டுகளையும் இரகசியமாய் இந்த இலாகா உத்தியோகஸ்தர்கள் விசாரித்துக் கண்டுபிடிப்பார்கள். இதிலும் இன்ஸ்பெக்டர்கள், சப் இன்ஸ்பெக்டர்கள், கான்ஸ்டேபிள் முதலிய உத்தியோகஸ்தர்கள் இருப்பார்கள்.

(11) போலீஸ்காரரிடத்தில் இருக்கும் சாமான்கள்:—

1. கால்சட்டை. 2. மேல்சட்டை. 3. தொப்பி. 4. அதில் நம்பர்கள். 5 தோல் பெல்ட் 6. பாட்நீஸ். 7. நெட்டைக் கம்பு. 8. துப்பாக்கி. 9. பிகில். 10. விளக்கு. 11. செருப்பு.

(12) போலீஸ் உத்தியோகஸ்தர்கள்:—

1. கான்ஸ்டேபிள். 2. ஹெட் கான்ஸ்டேபிள். 3. சப் இன்ஸ்பெக்டர், 4. இன்ஸ்பெக்டர். 5. டிப்டி சூப்ரன்டெண்ட். 6. அஸிஸ்டெண்ட் சூப்ரன்டெண்ட். 7. ஜில்லா சூப்ரன்டெண்ட். 8. டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல். 9. இன்ஸ்பெக்டர் ஜெனரல்.

(**13**) ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனிலும் இருக்கப் பட்ட போலீஸ் உத்தியோகஸ்தர்கள்:—

ஸ்டேஷன் ஹௌஸ் ஆபீசரும், பத்து, பனிரண்டு கான்ஸ்டேபிள்களும் இருப்பார்கள்.

(**14**) ஸ்டேஷன் ஹௌஸ் ஆபீஸராக:—

சப் இன்ஸ்பெக்டர் அல்லது ஹெட்கான்ஸ்டேபிள் ஆகிய இவர்களில் யாரையாவது நியமிப்பார்கள்.

(**15**) போலீஸ்காரர் பீட் இருக்கும் முககிய இடங்கள்:—

நாலுசந்துரோட், ஜன நெருக்கமான இடம், கடை வீதி, பேட்டை, சந்தை, ரெயில்வேஸ்டேஷன் இவ்விடங் களில் இருப்பார்கள்.

(**16**) போலீஸ்காரர்களின் முக்கிய அலுவல்கள்:—

1. குற்றவாளிகளைத் தேடிப்பிடித்து, நியாயசபை யில் நியாயம் அடையச் செய்வது.

2. கடைகளில் திருட்டுத்தனமாய் முத்திரை போடாத படிகள், நிறைகள் உபயோகிக்காமல் பார்த்துக் கொள்வது.

---

(குறிப்பு) அந்நிய நாட்டார் நமது தேசத்தின்மேற் படை எடுத்து நமக்குத் துன்பம் உண்டாக்காதபடி காப்ப தற்கு ஒவ்வொரு துறைமுகப் பட்டணங்களிலும் பயிற்று விக்கப்பட்ட காலாட்படை, குதிரைப்படை, பீரங்கிப்படை முதலிய சைன்னியங்கள் தயாராய் இருந்து வருகின்றன.

3. வீதிகளில் ஜனங்களின் போக்கு வரத்திற்கு இடைஞ்சலாக வண்டிகள், மாடுகள், சாமான்கள் இருக்காதபடி பார்த்துக் கொள்வது.

4. கவர்ன்மெண்டார் பொக்கிஷ சாலையைக் காவல் செய்வது.

5. தெருக்களிலும், மற்றுமுள்ள இடங்களிலும் சண்டை, சச்சரவுகள் நடக்காமல் பார்த்துக்கொள்வது.

6. குற்றஞ் சாட்டப்பட்டவர்களின் மேலும், குற்றவாளிகளென்று சமுசயப் பட்டவர்களின் மேலும் கண்ணோட்டமாய் இருந்து பிடிப்பது.

7. இரவில் யாதொருவிதமான திருட்டும் நடக்காதபடி ஊரைச்சுற்றிக் காவல் (ரோந்து) காப்பது.

8. தெருக்களிலும், ஊரைச்சுற்றிலும் ஜனங்கள் மலஜலங் கழித்து, ஆபாசப்படுத்தாதபடி பார்த்துக் கொள்வது.

**(17)** கேடிப்புள்ளிகளாவது:—

அடிக்கடி குற்றம் செய்து, ஜெயிலில் அடைபட்டவனும், போக்கிரி என்று சமுசயப்பட்டவனும் கேடிப் புள்ளிகள்.

**(18)** போலீஸ்காரர் பீட்டுப் போவதென்றால்:—

ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள் தன் மேலான ஆபீஸர் கட்டளைப்படி அடுத்த கிராமத்திற்கு ரோட்டு வழியாய்ப் போய் எதிரில் வரும் மற்றொரு கான்ஸ்டேபிளைச் சந்தித்துப் பீட் புஸ்தகத்தில் ஒருவருக்கொருவர் சந்தித்த தேதி, மணி இவைகளை எழுதிக் கையெழுத்துப்போட்டு, வரும் வழியில் உள்ள கிராமங்களில் கேடிப் புள்ளிகள் ஆஜரில் இருக்கிறார்களா என்று பார்க்க வேண்டியது.

அவர்கள் அங்கில்லா விட்டால் உடனே தன்னுடைய மேலான அதிகாரிக்கு ரிப்போர்ட்டு செய்யவேண்டியது. அவர்களைக் கண்டுபிடித்து அன்றைய தேதியில் இல்லாததற்குத் தகுந்த முகாந்தரம் கேட்கவேண்டியது.

---

## 17-ஆவது அதிகாரம்.

## சிறைச்சாலைகள்.

**(1)** குற்றவாளிகளை எப்படித்தண்டிக்கிறார்களென்றால்:-

1. அவர்களின் குற்றத்தின தன்மைக்குத் தக்கபடி அபராதம். 2. சாதாரணக்காவல். 3. கடுங்காவல். அந்தமான் தீவுக்கு அனுப்புதல். 5. தூக்கில் போடுதல் முதலியவைகளில் தண்டிக்கிறார்கள்.

**(2)** காவலில் வைக்க வேண்டியவர்களை:—

ஜெயிலில் வைப்பார்கள்.

**(3)** ஜெயில்களில்:—

1. ஸப்ஜெயில்.
2. டிஸ்டிரிக்ட் ஜெயில்.
3. ஸென்ட்ரல் ஜெயில்.
4. ஸ்பெஷல் ஜெயில் என நான்குவிதம் உண்டு.

**(4)** சப்ஜெயிலில் வைக்கப்படுகிறவர்:—

விசாரணையிலிருக்கும் குற்றவாளிகளையும், ஒருமாதத் தண்டனைக்குட்பட்ட கைதிகளையும் இங்கு வைக்கிறார்கள்.

**(5)** டிஸ்டிரிக்ட் ஜெயிலாவது:—

இது பெரிய பட்டணங்களில் உண்டு. ஒரு மாதத்திற்கு மேல் ஒரு வருஷம் வரையில் தண்டனை பெற்ற குற்றவா

ளிகளை இங்கே வைக்கிறார்கள். இதில் 500-கைதிகள் வரையில் வைக்கலாம்.

(6) ஸென்ட்ரல் ஜேயிலில் வைக்கப்படுகிறவர்கள்:—

ஒரு வருஷத்திற்கு மேல் தண்டனை அடைந்தவர்களையும், அந்தமான் தீவுக்கு அனுப்ப வேண்டியவர்களையும் இங்கே வைப்பார்கள். இதில் 500-பேருக்கு மேற்பட்ட கைதிகளை வைப்பார்கள்.

(7) ஷ்பெஷல் ஜேயிலாவது:—

பெனிடென்ஷியரி சிவில ஜெயில், குஷ்டரோகிகள் ஆஸ்பிடல் ஆகிய இவைகள் தான் ஷ்பெஷல் ஜெயில் எனப்படும்.

(8) ஜேயிலுக்குப் பெரிய அதிகாரி:—

ஜெயில் சூப்பிரன்டெண்ட்.

(9) இவருக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகள்:—

1. ஜெயிலர்கள்.
2. வாட்டர்கள்.
3. கேட்கீப்பர்கள்.

(10) கைதிகளின் தேகாரோக்கியத்தைப் பற்றிக் கவனிக்க வேண்டியவர்:—டிஸ்டிரிக்ட் மெடிக்கல் ஆபீஸர்.

(11) எல்லா ஜேயில்களுக்கும் பொறுப்புதாரியா யிருப்பவர்:—இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆப் ப்ரிஸன்ஸ்.

(12) குற்றவாளிகளை ஜேயிலில் வைக்கிற விதமாவது:-

குற்றவாளிகளில் ஆண், பெண், ஐரோப்பியக்கைதிகள், பூர்வீயக்கைதிகள் எனப் பலவித முண்டு. ஆகையால் அவர்களைத் தனித்தனி அறைகளில் வைக்கிறார்கள்.

**(13)** சிவில் கைதிகளுக்கும், கிரிமினல் கைதிகளுக்கும் வித்தியாசம்:-சிவில் கைதிகள் அவர்கள் சொந்த ஆடையை அணிந்து கொள்ளலாம். அவர்கள் சொந்த ஆகாரத்தை வரவழைத்துச் சாப்பிடலாம். சூப்பிரன்டெண்டின் உத்திரவின் பேரில் அவர்கள் செய்யக்கூடிய தொழிலைச் செய்து அதினால் வரும் லாபத்தை அவர்கள் அடையலாம்.

**(14)** இளம் பிராயமான கைதிகளை 18-வயது வரையில் செங்கற்பட்டிலுள்ள ரெபர்மொடரி ஸ்கூலுக்கு அனுப்பிக் கைத்தொழிலும் படிப்பும் கற்றுக்கொடுத்து, 18-வயது வந்தவுடன் தகுந்த ஜாமீன்மேல் விட்டுவிடுவார்கள்.

---

## 18-ஆவது அதிகாரம்.

## வித்தியா இலாகா அதிகாரம்

---

**(1)** வித்தியா இலாகா என்பதாவது:—

பள்ளிக்கூடப் படிப்பு விஷயமாய்க் கவனிக்கும் டிபார்ட்மெண்டுக்கு வித்தியா இலாகா என்று பெயர்.

**(2)** படிப்பு எத்தனை வகைப்படும்:—

1. உயர்தரப் படிப்பு.
2. கீழ்தரப் படிப்பு. என இரண்டு வகைப்படும்.

**(3)** பள்ளிக்கூடங்களின் பிரிவுகளாவது:—

1. எலிமெண்டரிப் பள்ளிக்கூடங்கள்.
2. செக்கண்டரிப் பள்ளிக் கூடங்கள்
3. காலேஜ் பள்ளிக்கூடங்கள்.

(4) எலிமெண்டரிப் பள்ளிக்கூடங்களில்:—

மூன்று வகைப்படும். அவை,

1. முதலாவது கிரேட் எலிமெண்டரிப் பள்ளிக்கூடம். இதில் பாலர்முதல் 7-வது வகுப்புவரையில் உண்டு.

2. இரண்டாவது கிரேட் எலிமெண்டரிப் பள்ளிக்கூடம். இதில் பாலர்முதல் 4-வது வகுப்புவரையில் உண்டு.

3. மூன்றுவது கிரேட் எலிமெண்டரிப் பள்ளிக்கூடம். இதில் பாலர்முதல் 3-வது வகுப்புவரையில் உண்டு.

(5) மேற்கண்ட பள்ளிக்கூடங்களை நடத்துகிறவர்கள்:-

சில சர்க்காராலும், சில ஸ்தல சுய ஆட்சி போர்டார்களாலும், சில சுதேச ஜனங்களாலும் நடத்தப்படுகின்றன.

(6) பள்ளிக்கூடம் சோதிக்கும் உத்தியோகஸ்தர்கள்:—

1. டிப்டி இன்ஸ்பெக்டர்.
2. டிஸ்ட்ரிக்ட் எடிகேஷனல் ஆபீஸர்.
3. ஜில்லா எலிமெண்டரி போர்டு கல்விச் சங்கம்.
4. ஜில்லா சக்கெண்டரி போர்டு கல்விச் சங்கம்.
5. டைரெக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன்.

(7) டிப்டி இன்ஸ்பெக்டர் வேலையாவது:—

எலிமெண்டரிப் பாடசாலைகளை அடிக்கடி பார்வையிட்டு உபாத்தியாயர்களுக்கு மாதிரிப்பாடம் போதித்துக் காட்டுதல், எலிமெண்டரி ஸ்கூல்களைப் பரீக்ஷை செய்து, மெச்சிங் கிராண்டு கொடுக்கப் பில்லுகள் தயார் செய்தல், புது ஸ்கூல்களை ஸ்தாபிக்கவும, போர்டு பாடசாலையிலுள்ள உபாத்தியாயர்களை நீக்கவும், நியமிக்கவும் சிபார்சு செய்தல்; ஸ்கூல்களில் ஏதேனும் ஒழுங்கீனங்க

ளிருந்தால் அதைப்பற்றி மேலாவுக்கு ரிப்போர்ட்டு செய்தல் முதலியன.

(8) டிஸ்ட்ரிக்ட் எடிகேஷனல் ஆபீஸர் வேலையாவது:--

சர்க்கார் உதவிக்காகப் பாடசாலைகளை அங்கீகாரம் செய்யவும், ஹைஸ்கூல், காலேஜ் முதலியவைகளை இன்ஸ்பெக்ஷன் செய்யவும், அந்தந்த இலாகா சம்பந்தமான கீழ் உத்தியோகஸ்தர்கள் நடத்துகிற சகல நடவடிக்கைகளை மேற்பார்வை செய்யவும், மேற்கண்ட உத்தியோகஸ்தர்களின் ஆபீஸ் சிப்பந்திகளை நீக்கவும் நியமிக்கவும் அதிகாரமுண்டு.

(9) டைரக்டர் துரையவர்களின் வேலையாவது:—

இந்த இலாகாவின் அபிவிர்த்தி விஷயமாய் அப்போதைக்கப்போது வேண்டும் உத்திரவுகளைப்பிறப்பிக்கவும், பொதுவாய்த் தனக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர்களின் அலுவல்களை மேற்பார்வை செய்யவும், அவர்களை நீக்கவும், நியமிக்கவும் அதிகாரம் உண்டு.

(10) கிராண்டு என்பதாவது:—

சர்க்காரால் பள்ளிக்கூடங்களைப் பரிக்ஷித்து, உபாத்தியாயரின் யோக்கியதாம்சத்துக்குத் தக்கபடியும், பள்ளிக்கூடத்தின் பொதுநிலைமை, பிள்ளைகளின் தேர்ச்சி முதலியவைகளுக்குத் தக்கபடியும் அளிக்கப்படும் பணத்திற்குக் கிராண்டு என்று பெயர்.

(11) புதிதாய் எலிமெண்டரிப் பாடசாலைகளுக்குச் சர்க்கார் கொடுக்கும் கிராண்டு:—

1. பிள்ளைகளின் ஆஜர் சராசரிக்குக் கிராண்டு இல்லை.

2. உபாத்திமைத் தொழில் பயிலாத உபாத்தியாய ருக்கு வருஷம் 1-க்கு ரூபாய் 48.

3. எலிமெண்டரி லோயர் கிரேட் பயின்ற உபாத்தி யாயருக்கு வருஷம் 1-க்கு ரூபாய் 72.

4. எலிமெண்டரி ஹையர் கிரேட் பயின்ற உபாத்தியா யருக்கு வருஷம் 1-க்கு ரூபாய் 96.

5. ஸெக்கண்டரி கிரேட் பயின்ற உபாத்தியாயருக்கு வருஷம் 1-க்கு ரூபாய் 180.

**(12)** எலிமேண்டரிப் பள்ளிக்கூடங்களின் விஷய மாய்த் துரைத்தனத்தார் புதிதாக ஏற்பாடு செய்திருக்கிற விதமாவது:—ஒவ்வொரு ஜில்லாவிலும் எலிமெண்டரி எடிகேஷனல் கௌன்சில், சக்கண்டரி எடிகேஷனல் கௌன்சில் என இரண்டு சங்கங்கள் ஏற்படுத்தி இருக்கி றார்கள். அச்சங்கத்தார் கல்வி அபிவிருத்திக்காக வேண் டிய இடங்களில் பாடசாலைகளைப் புதிதாக நியமிக்கவும், இனமாகப் படிப்புச் சொல்லிக் கொடுக்கவும் தக்க ஏற் பாடு செய்வார்கள்.

---

## 19-ஆவது அதிகாரம்.

## தபால் விஷயங்கள்.

---

**(1)** தபால் என்பது:—ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குச் சமாச்சாரங்களைக் கடிதாசியில் எழுதி அனுப்பு கிறதற்குத் தபால் என்று பெயர்.

**(2)** அயலூர்களுக்குச் சங்கதிகள்:—ஆள் மூலமாயா வது, கடிதத்தின் மூலமாயாவது தெரிவிக்கலாம்.

**(3)** கடிதத்தின் மூலமாய்த் தெரிவிப்பதற்கு ஏற்பட்டிருப்பது:—போஸ்டல் டிபார்ட்மெண்ட்.

**(4)** போஸ்டல் டிபார்ட்மேண்ட் வேலைகள் நடக்குமிடங்கள்:—போஸ்டாபீஸுகள்.

**(5)** போஸ்டாபீஸில் எத்தனை வகையெனில்:—

1. ஹெட் போஸ்டாபீஸ்.
2. சப்போஸ்டாபீஸ்.
3. பிராஞ்சு போஸ்டாபீஸ் என மூன்று வகைப்படும்.

**(6)** போஸ்ட்மாஸ்டர்கள்:—ஆறுவகைப் படுவார்கள்.

**(7)** அவர்களின் பெயராவது:—

1. பிரஸிடென்ஸி போஸ்ட்மாஸ்டர்.
2. போஸ்ட்மாஸ்டர் ஜனரல்.
3. ஹெட்போஸ்ட்மாஸ்டர்.
4. அஸிஸ்டெண்ட் போஸ்ட்மாஸ்டர்.
5. சப் போஸ்ட்மாஸ்டர்.
6. பிராஞ்ச் போஸ்ட்மாஸ்டர்.

**(8)** போஸ்டல் டிபார்ட்மேண்டில் பெரிய அதிகாரிகள்:-

1. போஸ்டல் இன்ஸ்பெக்டர்.
2. போஸ்டல் சூபரின்டெண்ட்.
3. தபால், தந்தி டைரக்டர்.
4. தபால், தந்தி அக்கௌண்டன்ட் ஜனரல்.

**(9)** தபாலாபீஸில் வேலை செய்பவர்கள்:—

1. போஸ்ட்மாஸ்டர்.
2. ஸிக்னலர், அதாவது தந்தி அடிக்கிறவர்.

3. பார்ஸல் ரிஜிஸ்டர் கிளார்க்.
4. போஸ்ட்மேன்.
5. வில்லேஜ் போஸ்ட்மேன்.
6. மெசஞ்சர்.
7. ரன்னர்.
8. மெயில் பியூன்.

**(10)** போஸ்டாபீஸில் நடக்கும் வேலைகள்:—

1. முத்திரைக் கடிதங்கள், லேபில்கள் விற்குதல்.

2. தபால் பெட்டியில் போடப்படும் காகிதங்களை அந்தந்த ஊர்களுக்கு அனுப்புதல்.

3. அயலூர்களுக்கு மணியார்டர் அனுப்புதல்.

4. பார்ஸல் அனுப்புதல்.

5. சாமான்களை இன்ஷ்யூர் செய்தல்.

6. ரிஜிஸ்டர் செய்தல்.

7. சேவிங்ஸ் பாங்குப் பணங்களை வாங்கல், கொடுக்கல் முதலிய கணக்குகளைச் சரியாய் வைத்து நடத்தல்.

8. அடுத்த ஊர்களிலிருந்து வரும் கடிதங்கள், பார்ஸல்கள், மணியாடர்கள் முதலியவைகளைப் போஸ்டுமேன் இடத்தில் கொடுத்து, அவரவர்களுக்குக் கொடுக்கும்படி செய்தல்.

**(11)** கார்டுகள். கவர்கள். லேபில்களின் வகைகள்:—

| | | |
|---|---|---|
| 1. | தனிக்கார்டு. | 6-பைசா. |
| 2. | ரிப்ளைக்கார்டு | ஒரு அணு. |
| 3. | கவர்க்கூடு | ஒரு அணு. |
| 4. | ஸ்குயர் கவர்க்கூடு | 1-அணு, 3-பைசா. |
| 5. | கமர்ஷியல் கவர்க்கூடு | 1-அணு 2-பைசா. |

6. லேபில்கள், $\frac{1}{2}$-அணா; 1-அணா; 2-அணா; $2\frac{1}{2}$-அணா; 3-அணா; 4-அணா; 6-அணா; 8-அணா; 12-அணா; 1-ரூபாய்; 2-ரூபாய்; 3-ரூபாய்; 5-ரூபாய்; 10-ரூபாய்; 15-ரூபாய்; 25-ரூபாய்.

**(12)** இந்த லேபில்களை:—நாம் அனுப்பும் கடிதங்களின் மேலும் பார்ஸல்களின்மேலும் கூலிக்காக வாங்கி ஒட்டிப் போடும்படி கவர்ன்மெண்டார் செய்திருக்கிறார்கள்.

**(13)** இந்த லேபில்களை வேறு யாரும்:—செய்யக்கூடாது. செய்தால் அவரைப் பிடித்துத் தண்டிக்கவும் அல்லது அந்தமான் தீவுக்கு ஏற்றிவிடவும் செய்வார்கள்.

**(14)** லேபிலின் மேலே:—நமது ராஜாவினுடைய உருவம் இருக்கிறது.

**(15)** நாம் எழுதி லேபில் ஒட்டிப் பெட்டியில்:—நாம் போட்ட கடிதங்களை எடுத்து, நாம் எழுதின ஊரின் பெயரை இங்கிலீஷில் எழுதி, முத்திரையிட்டு, பையில் போட்டுக் கட்டிச் சீல்போட்டு மெயில்பியூன் இடத்தில் போஸ்ட்மாஸ்டர் கொடுப்பார். அவன் அதைக்கொண்டு போய் ரெயிலில் இருக்கிற மெயில் ஸ்டார்ட்டரிடம் கொடுப்பான். மெயில் ஸ்டார்ட்டர் ரெயில் மார்க்கமாக அந்தந்த ஊர்களுக்குப்போய்ச் சேரும்படி செய்வார்.

**(16)** கடிதங்களின்மீது:—நாம் ஒட்டின லேபில்களை மறுபடியும் உபயோகப் படுத்தாமல் இருக்கும் பொருட்டும், இக்கடிதம் எந்த ஊரிலிருந்து வந்தது, எந்தத்தேதியில் எத்தனை மணிக்கு எடுக்கப்பட்டது என்று தெரியும் பொருட்டும் முத்திரை போடுகிறார்கள்.

**(17)** முத்திரையில்:—ஊரின்பெயர், வருஷம், மாதம், தேதி, மணிக்கணக்கு முதலியன எழுதியிருக்கும்.

(18) உள்நாட்டுத் தபால் விஷயங்கள்:—கார்டுகளில் இரகசியமில்லாத சமாச்சாரங்களை எழுதி அனுப்பலாம் கார்டு விலை அரையணா. இந்தக் கார்டுகளைத் தவிரப் பிரைவேட் கார்டுகளில் எழுதி அரையணாத் தலைச்சீட்டு வாங்கி ஒட்டிப் போடலாம். மேல்விலாசப் பக்கத்தில் மேல் விலாசத்தையும், ஒருபாதி வரையில் அனுப்புவோரது விலாசத்தையும் எழுதலாம். கடிதம் எழுதுவோர் பதில் உடனேவர ரிப்ளைக் கார்டுகள் உபயோகிக்கலாம். இதன் விலை அணா ஒன்று.

(19) கடிதங்களின் தபால் கூலி:--இரண்டரைத் தோலா எடைவரைக்கும் ஒரு அணா. அதற்கு மேற்கொண்ட ஒவ்வொரு இரண்டரை ரூபாய் எடைக்கும் ஒரு அணா.

(20) புஸ்தகம் அல்லது மாதிரிப் பாக்கட்டுகளாவது:—புஸ்தகப் பாக்கட்டு, மாதிரிப் பாக்கட்டு இவைகளை உட்புறம் திறந்தாவது, ஒட்டாத உறைகளிலாவது, அல்லது சுலபமாய்ப் பிரித்துப் பரிசோதனை செய்யும் படியாவது அனுப்ப வேண்டும். இவைகளில் கடிதங்கள் பணநோட்டுகள் முதலியவற்றை வைத்து அனுப்பக் கூடாது.

(21) இதற்குத் தபால் கூலி:—ஒவ்வொரு ஐந்து தோலா எடைக்கும், அதற்குக் கீழ்ப்பட்ட எடைக்கும் கூலி அரையணா.

(22) பார்ஸல்களுக்குக் கூலி:—

1. 20 தோலாவிற்கு உட்பட்டது 2-அணா
2. 40 தோலாவிற்கு ,, 3-அணா.
3. 80 தோலாவிற்கு ,, 6-அணா.
4. 120 தோலாவிற்கு ,, 9-அணா.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 5. | 160 தோலாவிற்கு | ,, | | 12-அணா | | |
| 6. | 200 தோலாவிற்கு | ,, | | 15-அணா. | | |
| 7, | 240 தோலாவிற்கு | ,, | ரூ | 1 | 2 | 0 |
| 8. | 280 தோலாவிற்கு | ,, | ரூ | 1 | 5 | 0 |
| 9, | 320 தோலாவிற்கு | ,, | ரூ | 1 | 8 | 0 |
| 10. | 360 தோலாவிற்கு | ,, | ரூ | 1 | 11 | 0 |
| 11, | 400 தோலாவிற்கு | ,, | ரூ | 1 | 14 | 0 |
| 12, | 440 தோலாவிற்கு | ,, | ரூ | 2 | 1 | 0 |

N. B. 440 தோலாவரையில் பார்ஸல் செய்யலாம். அதற்கு மேற்பட்ட எடையுள்ள பார்ஸல்களுக்குக் கூலி அதிகம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 13. | 480 தோலாவிற்கு | உட்பட்டது | ரூ | 3 | 0 | 0 |
| 14. | 520 தோலாவிற்கு | ,, | ,, | 3 | 4 | 0 |
| 15. | 560 தோலாவிற்கு | ,, | ,, | 3 | 8 | 0 |
| 16. | 600 தோலாவிற்கு | ,, | ,, | 3 | 12 | 0 |
| 17. | 640 தோலாவிற்கு | ,, | ,, | 4 | 0 | 0 |
| 18 | 680 தோலாவிற்கு | ,, | ,, | 4 | 4 | 0 |
| 19. | 720 தோலாவிற்கு | ,, | ,, | 4 | 8 | 0 |
| 20. | 760 தோலாவிற்கு | ,, | ,, | 4 | 12 | 0 |
| 21 | 800 தோலாவிற்கு | ,, | ,, | 5 | 0 | 0 |

ஒவ்வொரு பார்ஸலுக்கும் ரிஜிஸ்டர் கூலி 2 அணா அதிகமாகும்.

(**23**) வர்த்தமானப் பத்திரிகைகளுக்குக் கூலி:—

போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் ஆபிஸில் ரிஜிஸ்டர் செய்யப்பட்டபத்திரிகை மாத்திரமே 8 தோலா வரையில் கால் அணாக் தலைச்சீட்டு ஒட்டவேண்டும். அதற்கு மேற்பட்டு 20 தோலா வரைக்கும் அதன் சில்லறைக்கும் அரையணா.

பெற்றுக்கொண்ட ரசீது நமக்கு வரும்படியாக நம்முடைய விலாசத்தையும் எழுதி, அதற்குத் தகுந்த கமிஷனையும், அனுப்பும் தொகையையும், பாரத்தையும் கொண்டுபோய்ப் போஸ்டு மாஸ்டரிடம் கொடுத்தால் அவர் அதைப் பெற்றுக்கொண்டு, ஒரு ரசீது கொடுப்பார். இதற்கு மணியார்டர் அனுப்புதல் என்று பெயர்.

(28) சாதாரண மணியார்டரில்:— 1 அணா முதல் 600 ரூபாய்வரை அனுப்பலாம். சாதாரணமாய்ப் பைசாக்களை மணியார்டர் மூலமாய் அனுப்பக்கூடாது. ஆனால் சர்க்கார், முனிஸிபாலிடி, லோக்கல்போர்டு இவைகளுக்குச் செல்லவேண்டிய, தொகையையும், இவைகளால் மற்றவர்களுக்குச் செல்லவேண்டிய தொகையையும் பைசாக்களாய் இருக்குமானாலும் மணியார்டர் மூலமாய் அனுப்பலாம்.

(29) இன்சியூர் கவரில், 2000 ரூபாய் வரையும் இன்சியூர் செய்யலாம்.

(30) தந்தி மணியார்டர் அனுப்பும் விதம்:—தந்தியில் இரண்டு வகைப்படும். 1. எக்ஸ்பிரஸ் (சீக்கிரம் போய்ச்சேர ஏற்பட்டது.) 2. ஆர்டினெரி (சாதாரணமாய்ப் போய்ச் சேர ஏற்பட்டது.) ஆக இரண்டு விதம். இவ்விரண்டிலுள் நாம் விரும்பும் தந்தியைக் கொடுக்க உபயோகிக்கும் வார்த்தைகளைக் கணக்கிட்டுக் கூலி நிர்ணயம்செய்து, அந்தக் கூலியையும், மணியார்டர் கமிஷனையும் சேர்த்துக் கொடுக்கவேண்டும். அப்படி மணியார்டர் செய்கிறது ஒரு ரூபாய்க்குக் குறையப்படாது. 600 ரூபாய்க்கு மேற்படக்

கூடாது. சில சமயங்களில் போஸ்டாபீஸ் இல்லாத ஊருக்குத் தந்திமணியார்டர் அனுப்பவேண்டியிருக்கலாம். போஸ்டுமேன் போகக்கூடிய ஊராயிருந்தும், தந்திமணியார்டர் கொண்டுபோகவேண்டிய காலம், தபால் கொடுக்கப் போகும் காலத்தில் ஒத்திராமலிருக்கலாம். ஆகையால் தந்திமணியார்டர் அனுப்புகிறவர் மணியார்டர் பட்டுவாடா ஆகவேண்டிய போஸ்டாபீஸிலிருந்து அந்தக் கிராமத்திற்கு உடனே அனுப்ப ஓர் ஆட் கூலியையும் சேர்த்துச் செலுத்தி நமூனாவில் குறித்து விடவேண்டும். மணியார்டர் பாரத்தின் குறுக்கே எக்ஸ்பிரஸ் அல்லது ஆர்டினெரி என்று குறித்துவிடவேண்டும். விலாசக்காரர் வேறு ஊர்களுக்குப் போயிருந்தால் அனுப்பினவருக்கே கட்டணம் இல்லாமல் திருப்பிக் கொடுத்து விடுவார்கள்.

**(31)** ரெவினியூ மணியார்டர் என்பது:—நிலப்பட்டாதார் வேறு ஊரிலிருந்துகொண்டு, தன் நிலம் இருக்கும் ஊரின் கிராமமுன்சீப் மூலமாகத் தாசில்தாருக்கு அந்த ஊரிலுள்ள ஒரு பட்டா நிலத்திற்காவது அல்லது பல பட்டா நிலங்களுக்காவது செலுத்தவேண்டிய கிஸ்திப் பணத்தைக் காலம் தவறுதலில்லாமல் மணியார்டர் மூலமாய் அனுப்புவது. இப்படி அனுப்பப்பட்ட மணியார்டருக்கு ரெவினியூ மணியார்டர் என்று பெயர்.

**(32)** மணியார்டர் கமிஷன் விபரம்:—உள்நாட்டு மணியார்டர்களுக்கு வாங்கப்படும் கமிஷன் பின் வருமாறு:—

10 ரூபாய்க்கு மேற்படாத தொகைக்கு இரண்டணா.
25 ரூபாய்க்கு மேற்படாத தொகைக்கு நாலணா.
25 ரூபாய்க்கு மேற்பட்ட ஒவ்வொரு 25 ரூபாய்க்கும் 4 அணா உயர்ந்துகொண்டே போகும். 25 ரூபாய்க்குமேற்

பட்டு, 10 ரூபாய்க்கு உள்ளிருந்தால் அப்போது 2 அணா. உதாரணமாக, 35 ரூபாய் அனுப்பினால் 6 அணா.

600 ரூபாய்க்கு மேற்பட்டு விட்டால் ஒரு மணியார்டராக அனுப்பக்கூடாது.

(**33**) வால்யூ பேயபிள் என்பது— அயலூரிலிருந்து தபால்மார்க்கமாய்க் கடிகாரங்கள் புஸ்தகங்கள், ஜவுளி முதலிய சாமான்களைத் தருவிக்கிறவர்களிடமிருந்து, தபால் மார்க்கமாய்ப் பணம் வசூலிப்பதற்கு வால்யூபேயபிள் என்று பெயர்.

(**34**) வால்யூ பேயபிள் அனுப்பும் விதம்:— தபாலாபீஸில் கிடைக்கும் வி. பி. பாரத்தை வாங்கி, அதில் ஏற்பட்டுள்ள சாமான் பெற்றுக் கொள்ளுகிறவர்களுடைய விலாசத்தையும், அனுப்புகிறவர்களுடைய விலாசத்தையும், அனுப்புகிறவருக்குச் சேரவேண்டிய தொகையையும் தெளிவாய் எழுதிப் பாக்கெட்டின் மேலும் அவ்வாறே எழுதி அதன் இடைக்குத்தக்க போஸ்டேஜ் ஸ்டாம்பு வாங்கி ஒட்டிப் போஸ்டாபீஸில் சேர்த்தால் ரசீது கொடுப்பார்கள்.

### வி.பி. மணியார்டரின் விபரம்.

10 ரூபாய் பெறுமான வி. பி-க்கு கமிஷன் 2 அணா.

25 ரூபாய் பெறுமான வி. பி-க்கு கமிஷன் 4 அணா.

25 ரூபாய்க்கு மேற்பட்ட ஒவ்வொரு 25 ரூபாய்க்கும் 4-அணா. 25 ரூபாய்க்கு மேற்பட்டு 10 ரூபாய்க்குள் அடங்கியிருந்தால் 2 அணா. உதாரணமாக 35 ரூபாய் தொகையுள்ள வி. பி. பி-க்குக் கமிஷன் 6-அணா.

(35) இன்ஷியூரென்ஸ் செய்தல் என்பது:—ரிஜிஸ்டர் செய்யப்பட்ட கடிதங்கள், பார்ஸல்கள், விலைபெற்ற சாமான்கள் முதலியவைகளைத் தபால் மார்க்கமாய் அனுப்பும்போது அது தவறிப்போய் விட்டால் அந்த நஷ்டத்தைத் தபாலாபீஸாரிடம்வாங்குவதற்காக இன்ஷியூர் செய்யலாம்.

(36) இன்ஷியூர் செய்வதற்குக் கூலி விபரம்:— 50-ரூபாய்வரைக்கும் கூலி 1-அணா. 50-ரூபாய்க்குமேல்ஒவ்வொரு 50-ரூபாய்க்கும் அதின் சில்லறைக்கும் 1-அணா.

(87) சேவிங்ஸ்பாங்க் என்பது:—எல்லா ஜனங்களும் அவரவர்களுடைய செலவைச் சுருக்கித் தங்களுக்கு மிச்சபபடும் பணத்தை இலகுவாய்ச் சேர்த்துவைக்கும்படி தபாலாபீஸில் ஏற்படுத்தி யிருக்கும் ஒரு பாங்கிக்கு சேவிங்ஸ்பாங்க் என்று பெயர்.

(38) சேவிங்ஸ்பாங்கியில் பணம் போடும் அளவு:— ஒரு அபிஷியல் வருஷத்திற்கு 4-அணாவிலிருந்து 1200 ரூபாய் வரைக்கும் போடலாம்.

(39) நாம் பணம் போடுவது:—நாம் எவ்வளவு பணம் போடவேண்டுமோ அவ்வளவு பணத்தைக் கொண்டு போய்ப் போஸ்ட் மாஸ்டரிடம் கொடுத்தால், அவர் பணம் போடுகிறவர்களுடைய பெயர், தகப்பன்பெயர், தொழில் இவைகளை எழுதி வாங்கிக்கொண்டும், மாதிரிக் கையெழுத்து இரண்டு வாங்கிக்கொண்டும் ஒரு ரசீது கொடுப்

---

(குறிப்பு) இன்ஷியூரென்ஸ் செய்யும் ஒவ்வொரு சாமான்களையும் ரிஜிஸ்டர் செய்யவேண்டும்.

பார்கள். அந்தப் புஸ்தகம் தவறிப்போய் விட்டால் ஒரு ரூபாய் அபராதம் வாங்கிக்கொண்டு, திருமபவும ஒரு புஸ்தகம் கொடுப்பார்கள்.

**(40)** சேவிங்ஸ் பாங்கியில் பணம் கட்டக்கூடியவர்கள்:- யாரும் போஸ்டாபீஸ் சேவிங்ஸ்பாங்கியில் பணம் கட்டலாம். தன் பேருக்காவது, அல்லது பருவமடையாத தன் பந்துக்களில் யார்பேருக்காவது அல்லது தன் சவரக்ஷணைக் குள்ளிருக்கும் எந்த மைனர் பேருக்காவது பணம் கட்டலாம்.

**(41)** எத்தனைவிதமான நிபந்தனையின்மேல் பணம் கட்டலாம் என்றால்:—வேண்டுமென்றபோது பெறக்கூடிய நிபந்தனையின்மேலும், ஆறுமாத வாயிதா அறிக்கையில் பெறக்கூடிய நிபந்தனையின் மேலும் பணம் கட்டலாம்.

**(42)** இவ்விரண்டிற்கும் வட்டியில் வித்தியாசம்:— வேண்டுமென்றபோது பெறக்கூடிய தொகைக்கு 100-க்கு வருஷம் 1-க்கு 3 ரூபாய் வீதமும், ஆறுமாத வாயிதா அறிக்கையின்மேல் பெறக்கூடிய தொகைக்கு 100-க்கு வருஷம் 1-க்கு 4 ரூபாய் வீதமும் வட்டி கொடுப்பார்கள்.

**(43)** தபாலாபீஸில் பணம்சேர்த்துவைப்பதற்கும், வேறு பணக்காரரிடம் பணம் சேர்த்துவைப்பதற்கும் வித்தியாசம்:-

1. தபாலாபீஸில் எவ்வளவு சிறிய தொகையையும் போடலாம்.

2 பணத்தை வேண்டும் போதெல்லாம் வாங்கிக் கொள்ளலாம்.

3. நாம் எந்த இடத்திற்குப் போகிறோமோ அந்த இடத்திற்கு மாற்றிக் கொள்ளலாம்.

4. பணத்திற்கு மோசம் கிடையாது.

(44) அதிசீக்கிரத்தில் அயலார்களுக்குச் சங்கதி தெரிவிக்க வேண்டுமானால்:—தந்திமூலமாய்த் தெரிவிக்கலாம்.

(45) தந்தியில் எத்தனை வகை எனில்:—

1. சாதாரணத் தந்தி அதாவது (ஆர்டினரித் தந்தி)
2. அவசரத் தந்தி ,, (அர்ஜென்ட் தந்தி)

(46) சாதாரணத் தந்திக்குக் கூலி:—விலாசம் உள்பட 12 வார்த்தைகளுக்குக் கூலி 12 அணா. அதற்கு மேற்பட்டும் ஒவ்வொரு வார்த்தைக்கும் 1 அணா.

(47) அவசரத் தந்திக்குக் கூலி:—விலாசம் உள்பட 12 வார்த்தைகளுக்கு ரூ 1—8—0 அதற்கு மேற்பட்டும் ஒவ்வொரு வார்த்தைக்கும் 2 அணாவீதம் கொடுக்கவேண்டும்.

(48) போஸ்டாபீஸில் காசு கொடுக்காமல் வாங்கக்கூடிய பாரங்கள்:—மணியார்டர் பாரம், ரிஜிஸ்டர் பாரம், வி. பி. பாரம், தந்திப்பாரம், சேவிங்ஸ்பாங்கு வித்ராயல் பாரம்.

---

## 20-ஆவது அதிகாரம்.

## பத்திரப் பதிவு இலாகா.

---

(1) பத்திரப் பதிவு இலாகா என்பது:—பொதுஜனங்கள் தங்களுக்குச் சொந்தமான எல்லாவிதச் சொத்துக்களையும் தாங்களே யாதொரு மோசத்துக்கிடமின்றிக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு எழுத்து மூலமாய் ரிஜிஸ்டர் செய்து கொள்வதற்காக ஏற்பட்டிருப்பது பத்திரப்பதிவு இலாகா.

(2) பத்திரப் பதிவு இலாகா உத்தியோகஸ்தர்கள்:—

1. இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆப் ரிஜிஸ்ட்ரேஷன்.
2. ரிஜிஸ்டரார்.
3. சப் ரிஜிஸ்டரார்.
4. கிளர்க்கு.
5. பியூன்.
6. நைட்வாச்மேன்.

(3) நைட்வாச்மேன் வேலை:—இராக்காலங்களில் ஆபீ ஸைப் பந்தோபஸ்தாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டியது.

(4) பியூன் வேலை:—ஆபீஸ் சம்பந்தமான இருசால் களைக் கஜானாவுக்குக் கொண்டுபோவதும், சம்பளப்பில்லு களை மாற்றிவருவதும், மற்றும் ஆபீஸ்சம்பந்தமான வேலை களை மேலான ஆபீஸர் கட்டளைப்படி செய்வதும்.

(5) சப் ரிஜிஸ்டரார் வேலை:—ஏற்பட்ட கட்டணங்களை வாங்கிக் கொண்டு சாஸனங்களை ரிஜிஸ்டர் செய்யவும், சாட்சி விசாரணையின்மேல் சம்பந்தப்பட்ட கட்சிக்காரர் கள் இன்னாரின்னாரென்று தெரிந்துகொள்ளவும் கடமைப் பட்டிருக்கிறார்.

(9) கிளர்க்கு வேலை:—வரப்பட்ட பத்திரங்களைப் பெரிய நம்பர் போட்டுள்ள பைண்டுப் புத்தகத்தில் பத்தி ரத்தில் எழுதியிருக்கிறதுபோல் எழுதவேண்டியது.

(7) ரிஜிஸ்டரார் வேலை:—சாஸனங்களை ரிஜிஸ்டர் செய்வ தும், இந்த இலாகா சம்பந்தமான விவாதங்களை விசாரணை செய்து பைசல் செய்வதோடு தன் அதிகார எல்லைக்குள்ளி ருக்கிற ஆபீஸ் சிப்பந்திகளை நீக்கவும், நியமிக்கவும், ஆபீஸ் களைப் பரிசோதனை செய்யவும் அதிகாரம் பெற்றிருக்கிறார்.

(8) இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆப் ரிஜிஸ்டரேஷனவர்கள் வேலை:-இந்த இலாகா சீர்திருத்த விஷயமாய் அப்போதைக்கப்போது வேண்டும் உத்திரவுகள் பிறப்பிப்பதும், தன் கீழான உத்தியோகஸ்தர்களின் அலுவல்களைப் பொதுவாய் மேற்பார்வை செய்வதும், இந்த இலாகா சம்பந்தமான எல்லா உத்தியோகஸ்தர்களையும் நீக்கவும், நியமிக்கவும் அதிகாரம் பெற்றிருக்கிறார்கள்.

(9) சாஸனங்கள் ரிஜிஸ்டர் செய்வதற்குக் கூலி:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 ரூபாய்க்குமேல் 10 ரூபாய்வரை | ரூபா | 0 | 4 | 0 |
| 10 ரூபாய்க்குமேல் 25 ரூபாய்வரை | ,, | 0 | 6 | 0 |
| 25 ரூபாய்க்குமேல் 50 ரூபாய்வரை | ,, | 0 | 8 | 0 |
| 50 ரூபாய்க்குமேல் 75 ரூபாய்வரை | ,, | 0 | 12 | 0 |
| 75 ரூபாய்க்குமேல் 100 ரூபாய்வரை | ,, | 1 | 0 | 0 |
| 100 ரூபாய்க்குமேல் 200 ரூபாய்வரை | ,, | 1 | 8 | 0 |
| 200 ரூபாய்க்குமேல் 300 ரூபாய்வரை | ,, | 2 | 0 | 0 |
| 300 ரூபாய்க்குமேல் 400 ரூபாய்வரை | ,, | 2 | 8 | 0 |
| 400 ரூபாய்க்குமேல் 500 ரூபாய்வரை | ,, | 3 | 0 | 0 |
| 500 ரூபாய்க்குமேல் 600 ரூபாய்வரை | ,, | 3 | 8 | 0 |
| 600 ரூபாய்க்குமேல் 750 ரூபாய்வரை | ,, | 4 | 0 | 0 |
| 750 ரூபாய்க்குமேல் 1000 ரூபாய்வரை | ,, | 5 | 0 | 0 |
| 1000 ரூபாய்க்குமேல் 2500 ரூபாய்வரை பிரதி 500 ரூபாய்க்கு | ,, | 1 | 0 | 0 |
| 2500 ரூபாய்க்குமேல் 5000 ரூபாய்வரை பிரதி 500 ரூபாய்க்கு | ,, | 1 | 8 | 0 |
| 5000 ரூபாய்க்குமேல் 25000 ரூபாய்வரை பிரதி 1000 ரூபாய்க்கு | ,, | 2 | 0 | 0 |
| 25000 ரூபாய்க்குமேல் 50000 ரூபாய்வரை பிரதி 1000 ரூபாய்க்கு | ,, | 2 | 8 | 0 |

| | | | |
|---|---|---|---|
| 50000 ரூபாய்க்குமேல் பிரதி 1000 ரூபாய்க்கு | 3 | 0 | 0 |
| பவர் ரிஜிஸ்டர் | 3 | 0 | 0 |
| அட்டஸ்டேஷன் | 0 | 8 | 0 |

அசையாப் பொருளைக் குறித்த தஸ்தாவேஜுகளைத்தேடி எடுக்கும் கூலி, தேடும் முதல் வருஷத்திற்கு ரூபாய் 1. மற்ற பிரதி வருஷத்திற்கும் அணா 4. தஸ்தாவேஜுகளுக்கு நகல் வேண்டுமானால் சுதேச பாஷையில் நகல் கட்டணம் 100 வார்த்தைகளுக்கு 1 அணா வீதம் செலுத்த வேண்டும். இங்கிலீஷ் வார்த்தைகளுக்கு முன்போல் அதிகக்கட்டணமில்லை. நகல்வேண்டியவர்கள் தேவையான காப்பிக்கு முத்திரைக்காகிதங்களை வாங்கிக்கொடுக்கவேண்டும்.

---

## 21-ஆவது அதிகாரம்.

## ஐக்கிய நாணயம்.

இதற்குக் கோவாப்ரேட்டிவ் ஸொஸைட்டி சங்கம் அல்லது கூட்டுறவுச் சங்கம் என்று பெயர்.

பீடிகை:—இந்தியாவின் இயற்கையமைப்பே விபசாயத்திற்கு ஏற்றதாயிருப்பதால் ஆதிகாலம் தொட்டு இந்தியாவில் உள்ள ஜனங்கள் விபசாயத்தைத் தங்கள் முக்கியத் தொழிலாகக் கையாடி வருகிறார்கள். ஆனால் நாளடைவில் இத்தேசத்தின் ஜனசங்கியை அதிகரித்துக் கொண்டு வருகிறபடியாலும், பயிர் செய்கிற நிலமான து வளப்பமற்றுப் போகிறபடியாலும், விபசாயத்தில் அபிவிர்த்தி செய்வதும், புதிய நிலங்களை விபசாயத்திற்கு ஏற்றதாய்ச் செய்வதும் அவசியம். விபசாயங்களுக்கு மேற்படி சீர்திருத்தம் செய்வதற்குவேண்டிய செலவுகளுக்கும், மற்ற

செலவுகளுக்கும் உதவி செய்யுமாறு சர்க்காரால் ஐக்கிய நாணய சங்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

(**1**) ஐக்கிய நாணய சங்கத்தால் உண்டாகிற நன்மைகள்:-

1. இச்சங்கம் ஏற்பட்டிருக்கிற கிராமத்தில் ஜனங்களுக்குள் யோக்கியமும், ஒற்றுமையும் ஏற்பட்டிருக்கிறது.

2. வட்டிக்குப் பணம் கொடுப்போர்க்கு முதலைப்பற்றிப் பயம் ஒன்றும் கிடையாது.

3. பணம் பெறுவோரும், வட்டிக்கு வாங்குவோரும் சொற்ப வட்டி தான் செலுத்தவேண்டி யிருப்பதால் நல்ல லாபம் அடைகிறார்கள்.

4. ஒரு ஐக்கிய சங்கத்தில் சேர்ந்த ஒரு ஏழை மனிதன் கூட யோக்கியனாகவும், சம்பாதிக்கக் கூடியவனாகவும் இருந்தால் அந்த ஐக்கிய சங்கத்தாருடைய வல்லமை யின்மேல் அவன் கடன்பெற யோக்கியனாயிருக்கிறான்.

(**2**) ஐக்கிய சங்கங்களைக் கூட்டி வேலை நடத்தப் பிரிய முள்ளவர்கள் செய்யவேண்டிய வேலை:—ஐக்கிய சங்கத்தில் சேரப் பிரியமுள்ளவர்கள் தங்களுக்குள் ஒருவருக்கொரு வர் நம்பிக்கையுள்ளவர்களாய் இருக்கவேண்டும். அப்படி யோக்கியமுள்ளவர்களும், நல்லவர்களுமான சிலர் சேர்ந்து ஐக்கிய சங்கங்களின் அதிபதியாகிய ரிஜிஸ்டரார் அவர் களுக்கு மனுச்செய்து கொள்ளவேண்டும்.

(**3**) அந்த மனுவை ரிஜிஸ்டரார் அவர்கள் பெற்றுக் கொண்டு:—பூர்த்தி செய்து அனுப்பும்படியாய் மனுதாரர் களுக்கு ஒரு மனு அனுப்புவார்கள்.

(4) பூர்த்தி செய்யவேண்டிய விபரங்கள்:—

1. ஐக்கிய சங்கத்தில் சேருவதற்குப் பிரியமுள்ள மெம்பர்களின் பெயர்.
2. ஒவ்வொரு மெம்பருக்குமுள்ள பூஸ்திதியின் விஸ்தீரணம், சங்கம சொத்தின் மதிப்பு.
3. ஒவ்வொரு மெம்பரின் வருஷ சராசரி வரும்படி.
4. ஒவ்வொருவிண்ணப்பதாரின் தற்காலக்கடன்தொகை.
5. பழைய கடனைத் தீர்க்கவும், தற்காலச்செலவுக்காகவும். ஒவ்வொருவருக்கும் வேண்டிய கடன் தொகை.

(5) இந்த விண்ணப்பமனு அவரிடம் போய்ச் சேர்ந்தவுடன் அவர் என்ன செய்வார் எனில்:—இந்தச் சங்கம் ஒழுங்காய் நடப்பதற்கு வேண்டிய சட்டதிட்டங்களை ஏற்படுத்திக்கொள்ளுமாறு உதவி செய்யும்படியாய் ஐக்கிய சங்கங்களின் இன்ஸ்பெக்டர் ஒருவரையாவது அல்லது கௌரவ ஆர்கனைஸர் என்ற ஒருவரையாவது அனுப்புவார்.

(6) அவர் வந்து செய்யும் காரியங்கள்:—இந்தச் சங்கத்தார் காரியங்களைச் சரியாய் நடத்துவார்கள் என்றும், அவர்கள் ஏற்படுத்திய சட்டம் சரிதானென்றும் அறிந்தவுடன் அந்தச் சங்கத்தைச் சட்டப்படி ரிஜிஸ்தர் செய்து விடுவார்.

(7) இந்தச் சங்கத்தின் காரியங்களை:—இச் சங்கத்தார் தாமே தங்களுக்குள் 5பேர்களுக்குக்குறையாமல் ஒரு பஞ்சாயத்தாரை நியமித்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

(8) கூட்டுறவுச் சங்கங்களைச் சர்க்காரால் ஏற்படுத்தியதின் நோக்கம்:—இதனால் சர்க்காருக்கு லாபம் ஒன்றும்

இல்லை. சிறு கிராமத்திலுள்ள ஏழைகளும் இச்சங்கத்தில் மெம்பராகச் சேர்ந்தால் பணக்காரராகவும், புத்திசாலியாக வும், யோக்யராகவும் ஆய்விடுவார்கள். இதிலிருந்து மிகுந்த நன்மையும் அடைவார்கள். ஆதலால் இச்சங்கம் குடிகளின் நன்மையைக் கருதியே ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

(9) இச்சங்கத்திலிருந்து கடன் கொடுப்பதற்குப்பொருள்:- இச்சங்கம் கூட்டுகிற இடங்களில் இதற்கு மூல தனம் இவ்வளவு தொகை என்றும், பங்கு 1க்கு- ரூபாய் இவ்வளவு என்றும் ஏற்படுத்தியிருப்பார்கள். இதில் மெம்பராகச் சேருகிறவர்கள் தங்கள் ஆஸ்திக்குத் தக்கபடி எத்தனை பங்கு வேண்டுமோ அத்தனை பங்குத் தொகைபோட்டு வைப்பார்கள். சர்க்காராலும் சில பங்குகளுக்குத் தொகைபோட்டு வைப்பார்கள். இந்த மொத்தத் தொகையிலிருந்து வட்டிக்குக் கடன் கொடுப்பார்கள்.

(10) இச்சங்கத்தில் கடன் பெறக்கூடியவர்கள்:—இச்சங்கத்தில் மெம்பர்களாகச் சேர்ந்தவர்கள் மட்டும் கடன் வாங்கலாம்.

(11) மெம்பராகச் சேர்ந்தவர்கள் எவ்வளவு தொகை பெறலாம் எனில்:—சங்கங்களில் மெம்பராக உள்ளவர்கள் ஓர் ஊரிலிருப்பவர்களாதலால் ஒவ்வொருவரின் தன்மையும் அவர்களுக்கு நன்றாய்த்தெரியும் ஆதலால் அவர்களுடைய ஆஸ்திக்குத் தக்கபடி கவனித்துக் கொடுப்பார்கள்.

(12) இச்சங்கத்தில் மெம்பராகச் சேர்ந்து கடன் வாங்குவதால் ஏற்படும் லாபமும். இதில் மெம்பராகச் சேர்ந்திருப்பதால் ஏற்படும் லாபமும்:—கடன் வாங்குவோர்க்கு வட்டி சகாயமாய்க்கிடைக்கும். அவர்கள் அவசரத்திற்குத் தக்கபடி உடனே பணம் கிடைக்கும் இதில் வட்டி கிடைக்கும்

லாபத்தில் இவர்களுக்குப் பங்கும் கிடைக்கும். உரம் எரு வேண்டியவைகளை இச்சங்க மூலமாய் வரவழைத்துப் பங்கிட்டுக்கொள்ளலாம். விலை சகாயமாய்க் கிடைக்கும். இவர்கள் வயலில் விளையும் தானியங்களை இவர்களே தனியாய்க் கொண்டுபோய் விற்பதைக் காட்டிலும் இச்சங்கத்தில் வைத்து விற்பனை செய்வதால் அதிக லாபம் கிடைக்கும்.

(**13**) இச்சங்கத்தை நடத்திவரப் பஞ்சாயத்து மெம்பர்களாய் நியமித்திருக்கின்ற ஐந்து மெம்பர்களுக்கும் உள்ள அதிகாரம்:—மெம்பராய்ச் சேருகிறவர்கள் சங்கம் கூடும்போதெல்லாம் சங்கத்தைப்பற்றிய விஷயங்களை எடுத்துப்பேச அதிகாரம் உண்டு. வருஷத்திற்கு ஒருதடவை சங்கத்தின் மகாசபை ஒன்று கூட்டவேண்டும். அச்சபையில் பஞ்சாயத்தார் செய்திருக்கும் நடபடிக்கைகளைச் சரியாய்க் கவனித்து, வேறு பஞ்சாயத்து மெம்பர்களை நியமிக்கவும் அதிகாரம் உண்டு.

(**14**) இச்சங்கம் அபிவிருத்தியடைவதும் கெட்டுப்போவதும்:—இதில்சேரும் மெம்பர்கள் சங்கத்தை விருத்தி செய்யவேண்டுமென்று சிரமம் எடுப்பவர்களாயும், விவேகம் பொருந்தியவர்களாயும், நாணயம் உள்ளவர்களாயும், சுயநலம் கருதாதவர்களாயும் இருந்து, நடத்திவருவார்களானல் விருத்தியடையும். அல்லாமல் சோம்பேறிகளாயும், சுயநலம் கருதுபவர்களாயும், நாணயமில்லாதவர்களாயும், விவேகமில்லாதவர்களாயும் இருந்து நடத்திவருவார்களானல் விருத்தியாகாமல் கெட்டுப்போகும்.

(**15**) இச்சங்கத்தின் மூலதனம் போதாவிடில்:—சங்கம் மெம்பர்களே போடவேண்டுமென்பதில்லை. இச்சங்கத்தில் மெம்பராகச் சேராதவர்களும் பணம் போட்டுவைக்கலாம்.

அவர்களுக்கு வட்டி கிடைக்கும். சங்கத்தின் ஆஸ்திக்குள் ளேதான் கடன் வாங்கலாம்.

(**16**) இச்சங்கத்தில் ஏதேனுங் நஷ்டம் ஏற்பட்டுவிட் டால் மெம்பர்களாய்ச் சேருகிறவர்கள் போடுகிற தொகையும் மெம்பரல்லாதவர்கள் போடுகிற தொகையும் யாரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம் எனில்:—இச்சங்கத்தில் ஒருபோதும் நஷ்டம் ஏற்படமாட்டாது. சங்கத்திற்குக் கடன் வாங்கும் தொகை சங்கத்தின் சொத்தைக்காட்டிலும் குறைவாகவே இருக்கும். வருஷந்தோறும் கிடைக்கும் லாபங்களில் ஒரு பாகத்தைக் காப்புத்தனமென்று நிறுத்திவைத்து வருவார் கள். அத்தொகை சில வருடங்களில் ஏராளமாய்ச் சேர்ந்து விடும். அப்படி யாதேனும் தவறுதலாய் நஷ்டம் ஏற்பட் டால் அத்தொகையிலிருந்து ஈடுசெய்து கொள்வார்கள். அன்றியும் இச்சங்கத்தில் சேர்ந்த மெம்பர்களுக்கே கடன் கொடுத்து வருவதால் நஷ்டம் ஏற்பட இடமில்லை. அது வுந்தவிர நஷ்டம் ஏற்பட்டால் சங்க மெம்பர்களே நஷ் டத்திற்குப் பாத்தியப்பட்டவர்களா யிருக்கிறார்கள். ஆக லால் பணம் போடுகிறவருக்கு ஒரு நஷ்டமுமில்லை.

(**17**) சங்கத்தில் சேரும் மெம்பர்களே நஷ்டத்திற்குப் பாத்தியப்படவேண்டுமென்றால் மெம்பராகச்சேருதல் அபாய மாகுமல்லவா எனில்:—சங்க மெம்பர்களே சங்கத்தை விருத்திசெய்வதற்குத் தகுதியான பஞ்சாயத்து மெம்பர்க ளைத்தேர்ந்து எடுக்கிறார்கள். இவர்களும் அடிக்கொருதரம் கவனித்து வருகிறார்கள். அன்றியும் அச்சங்கங்களின் நட படிக்கைகளைச் சரியாய்ப் பரிசோதித்துவரும்படி சர்க்கார் ஐக்கியசங்க இன்ஸ்பெக்டர்களையும், யூனியன் சூப்ரவைசர் என்னும் பரிசோதகர்களையும் அனுப்பி வருகிறார்கள். அவர் கள் கணக்கு முதலியவைகளைச் சரிவரப் பார்வையிட்டு,

ஏதேனும் குறைகள் ஏற்பட்டிருந்தால் அவைகளைச் சீர் திருத்தச் சரியான ஏற்பாடுசெய்து வருகிறார்கள். ஆதலால் மெம்பர்களாய்ச் சேருகிறவர்களுக்கு ஒன்றும் பயமில்லை.

(28) கடனுகைப் பணம் வாங்கின மெம்பர் கடனைச் செலுத்துதல்:—குறித்த வாயிதாக் காலத்துக்குள் ஒவ்வொரு ரூபாயாகச் செலுத்தினாலும், மொத்தமாகச் செலுத்தினாலும் ஏற்றுக் கொள்வார்கள்.

(29) சங்கத்தில் கடன் வாங்குவோர் குறித்த காலத்துக்குள் கோடாதிருந்தால் வசூல் செய்வது:—பஞ்சாயத்து மெம்பர்கள் கடன்வாங்கினவர்களுக்கு நோட்டீஸ் கொடுப்பார்கள். அதற்கும் பணம் செலுத்தாவிடில் சர்க்கார் அதிகாரியான கோவாப்ரேடிவ் அஸிஸ்டெண்டு ரிஜிஸ்தரார் அவர்களுக்குத் தெரிவிப்பார்கள். அவர்களே விசாரித்துத் தீர்ப்புச் செய்வார்கள். அந்தத்தீர்ப்பைச் சிவில் கோர்ட்டு மூலமாய்ச் செலவின்பேரில் வசூலிப்பார்கள். பெருந்தொகையாயிருந்து சிவில் மூலமாய் வசூல் செய்வது கஷ்டமாயிருந்தால், ரெவினியூ இலாகா உத்தியோகஸ்தர் மூலமாய் வசூலித்து விடுவார்கள்.

(30) பஞ்சாயத்து மெம்பர்கள் ஒன்றுகூடிப் பணங்களை மோசம்செய்து விடாதபடி:—சங்க மெம்பர்கள் கௌரவமும், யோக்கியமு முள்ளவர்களை நியமிப்பார்கள். அப்படி யேதேனும் ஏற்பட்டால் சர்க்கார் அதிகாரிகள் மூலமாகவும், கோவாப்ரேடிவ் யூனியன் அதிகாரிகள் மூலமாகவும் பஞ்சாயததாரிடம் வசூலித்து விடுவார்கள்.

ஆதலால் இச்சங்கத்தின் மூலமாய் எவ்விதத்திலும் பயமில்லை. எல்லோருக்கும் லாபமேயுண்டு.

---

## 22-வது அதிகாரம்.

## அரசிறை.

---

(1) நாம் கவர்ன்மேண்டாருக்கு வரி கொடுக்கும் நோக்கமாவது:-நமக்குவேண்டிய ஒவ்வொரு நன்மைகளையும் செய்துகொள்வது நம்மால்முடியாதகாரியம் ஆகையால் அதைச் செய்யும்படி கவர்ன்மெண்டார் ஆட்களை வைத்து நடத்தி வருகிறார்கள். இதற்காக நாம் வரிகொடுத்து வருகிறோம்.

(2) கவர்ன்மேண்டுக்கு வரி கிடைக்கிற விதம்:—

1. பூமித்தீர்வை 2. ஆப்காரி. 3 ஸ்டாம்பு. 4 ஏற்றுமதி. 5 இறக்குமதி. 6. வரும்படி வரி. 7. காட்டிலாகா. 8. ரிஜிஸ்ட்ரேஷன். 9. தபால். 10 தந்தி. 11. சட்டதிதி. 12. போலீஸ் சார்ஜ் பண்ணி விதித்த அபராதம். 13. படிப்பு. 14. வைத்தியம். (மருந்து விற்பனை) 15. சுதேச ராஜாக்களால் கப்பம்.

(3) இப்படி வருகிற வரும்படிகளைக் கொண்டு:-1. பூமித்தீர்வை வசூல் செய்கிற உத்தியோகஸ்தர்களின் சம்பளம். 2. அபின், உப்பு, ஸ்டாம்புகள், ஆப்காரி, ஏற்றுமதி, இறக்குமதி, காட்டிலாகா, ரிஜிஸ்ட்ரேஷன், தபால், தந்தி, சட்டதிதி, போலீஸ், படிப்பு, வைத்தியம் இவைகளுக்காக ஏற்படுத்தியிருக்கும் உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் முதலியன கொடுப்பார்கள்.

(4) பட்டாவென்பது:—தென் இந்தியாவிலே உள்ள குடித்தனக்காரர் நிலங்களைத் தாமே பயிரிட்டுச் சர்க்காருக்கு நேராக வரியைச் செலுத்தி வருகிறார்கள். கவர்ன்மெண்டார் ஒவ்வொரு குடித்தனக்காரருக்கும் நிலத்தின்

நம்பரையும், விஸ்தீரணத்தையும், அதற்கு அவர் கொடுக்க வேண்டிய தீர்வையின் விபரத்தையும் ஒரு கடிதத்தில் குறித்துச் சர்க்கார் முத்திரையிட்டுக் குடித்தனக்காரரிடம் கொடுக்கிறார்கள். இத்தஸ்தாவேசுக்குப் பட்டாளென்றுபேர்.

(**5**) இந்தப் பட்டாவில்:—1. நிலப்பட்டா. 2. மரப் பட்டா. 3. மனைப்பட்டா என மூன்று வகைப்படும்.

(**6**) பட்டா மாறுத லென்பது:—பட்டா மாறுதல் மூன்று விதமாகும்.

1. ஒருவர் தம் நிலத்தைக் கிரயம் செய்வதாயிருந்த போதிலும், தானம் செய்வதா யிருந்தபோதிலும் பத்திரம் ரிஜிஸ்தர் செய்யும்போது ரிஜிஸ்தர் ஆபீஸிலேயே மற் றொருவர் பேரில் பட்டா மாறுதல் செய்துவைக்க விண் ணப்பம் செய்யவேண்டும்.

2. கோர்ட்டு டிக்கிரிக்காக ஏலம்போடும் நிலங்களை ஏலமெடுத்தவன் பேரில் கவர்ன்மெண்டார் பட்டா மாறு தல் செய்யவேண்டும்.

3. ஒருவன் தனக்குப் பிதிராஜிதமாய் வந்த நிலங்க ளின் பட்டாவைத் தன்பேரில் மாற்றிக்கொள்ளப் பட்டா மாற்ற வேண்டிய நிலத்தைக் குறித்து, ரெவினியூ இன்ஸ் பெக்டர்கள் கிராமத்திற்கு வந்திருக்கும் காலத்தில் மனுச் செய்துகொண்டால் உடனே உத்திரவு பெற்று மாற்றிக் கொள்ளலாம். அந்த மனுவில் கிராமக்கர்ணம், கிராமாதி காரி இவர்களுள் ஒருவராவது கையெழுத்துச் செய்ய வேண்டும். தனக்கு ஆதாரமான தஸ்தவேஸுகளுடன் மனுச்செய்து கொண்டால், அந்த விஷயத்தை ஜில்லா கெஜட்டில் பிரசுரம் செய்து, ஆட்சேபனை இல்லாதிருக்கு

மாஞல் பட்டா மாறுதலுக்கு உத்திரவாகலாம். ஆட்சே பனை உண்டானல் இருகட்சிக்காரர்களையும் விசாரணை செய்து, அதில் ருஜுவாகிற பிரகாரம் உத்திரவாகும். பட்டாமாறுதல் விஷயமாய் மனுச்செய்து கொள்ளாம லிருந்தால் ஜமாபந்தி காலத்தில் டிவிஷனல் ஆபீஸர், தாசில்தார் இவர்களுக்கு விண்ணப்பம் செய்தால் இவர் கள் விசாரித்து, ஆட்சேபனை இல்லாதிருந்தால் உடனே மாற்ற உத்திரவிட்டுக் கர்ணமுடைய அடங்கல் கணக்கில் குறிக்க உத்திரவாகும். ஆட்சேபனை உண்டானல் முன் சொன்ன பிரகாரம் ஜில்லா கெஜட்டில் பிரசுரம் செய்து விசாரித்து முடிவாகும்.

(7) தற்காஸ்து மனு என்பது:--கிராமங்களில் ஸெட்டில் மெண்டாரால் வரி யேற்படுத்தப் படாமலும், ஏற்படுத்தப் பட்டு, உபயோகிக்கப் படாமலும் இருக்கப்பட்ட தரிசு, புறம்போக்கு முதலிய காலி நிலங்கள் கிடைக்கக் கொடுக் கும் மனு தற்காஸ்து மனு எனப்படும்.

(8) இராஜிநாமா என்பது:—ஏதோ ஒரு காரணத்தால் நிலத்தைச் சர்க்காரில் தாக்கல் செய்து, அதற்குள்ள தீர்வையை நீக்கிக்கொள்ளக்கொடுக்கும் மனு இராஜிநாமா.

(9) வஜாமனு என்பது:—ஜலத்தின் குறைவாலாவது, அதிமிகுதியாலாவது நிலம் பயிரிடாமல் அல்லது பயிரிட்டு, விளையாமற்போகுமாஞல் அதற்கு வரி தள்ளுபடி செய் யக்கொடுக்கும் மனு வஜாமனு எனப்படும்.

(10) வஜாமனு கோடுப்பதாயிருந்தால்:—மாசூல் அறு வடைக்குமுன்னும், ஜில்லாக் கலெக்டர் அவர்களால் குறிக்கப்படும் தேதிக்கு முன்னும் கொடுக்கவேண்டும்.

**(11)** இராஜிநாமா மனு கொடுப்பதாயிருந்தால்:—இராஜிநாமா மனுக்காரரால் கெஜட்டில் குறிக்கப்படும் தேதிக்கு முன் கொடுக்கவேண்டும்.

**(12)** பட்டாமனு, தற்காஸ்துமனு இவைகளை:—எந்தச் சமயத்திலும் கொடுக்கலாம்.

**(13)** மனுக்கள் செய்யவேண்டிய இடமாவது:—கிராமாதிகாரி மூலமாயும், நேராயும் ரெவினியூ அதிகாரிகளுக்குச் செய்யவேண்டியது.

**(14)** மனுக்கள் செய்கிற விதமாவது:— அதற்கென்று ஏற்பட்டிருக்கும் பாரங்களில் போட்டிருப்பவைகளைப்பூர்த்திசெய்து, ரெவினியூ ஆபீஸர்களிடம் கொடுக்கவேண்டும்.

மனுப்பாரங்கள் (A) பட்டா நமுனா.

........................பஸலிப்பட்டா.................
...................ஜில்லாக் கலெக்டராகிய....................
துரையவர்களால்.........................தாலூகா. ...........
...............கிராமத்தின் குடியாகிய...................க்கு
...............ஞெ........மீ........வயில் கொடுக்கப்பட்ட பட்டா, இந்தப் பட்டாவில் கண்டிருக்கும் கிஸ்திப்பிரகாரம் கிராமமுன்சிப் இடத்தில் செலுத்தவேண்டும்.

மாதாந்தரகிஸ்தி.

| மாதங்கள் | வீதம்<br>ரூ அ பை |
|---|---|
| .................. | ............... |
| .................. | ............... |
| .................. | ............... |
| .................. | ............... |

| நன்செய் அல்லது புன்செய் சர்வே நம்பர். | சர்வே நம்பரின் உட்பிரிவு | தரம் அல்லது வகுப்பு | விஸ்தீரணம் | தீர்வை. | ஷெரா |
|---|---|---|---|---|---|
| | | | எக்கர் செண்டு. | ரூ. அ. பை. | |
| | | | | | |

## (B) பட்டா டிரான்ஸ்பர் நமூனா.

..........ஜில்லா..........தாலூகா ..........கிராமத்தில் வசிக்கும்.......... ..........ருடைய குமாரன் அல்லது குமாரர்கள் ஆகிய..........என்னும் நான் அல்லது நாங்கள் இதனடியில் சேர்க்கப்பட்டிருக்கிற ஷெடியூலிற் கண்ட நிலங்களை அவைகளுக்காக என்னுடைய அல்லது எங்களுடைய பெயரால் இருக்கிற பட்டாவையும்.......... ..........கிராமத்தில் வசிக்கிற.......... குமாரன்..........டைய பெயருக்கு மாற்ற இதனால் தங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

கையெழுத்து.

௵ ௴ ௳.

## பட்டா மாற்றிக்கொள்ளுகிறவர்களின் ஸ்டேட்மெண்ட்.

மேலேகண்ட நான் அல்லது நாங்கள் ஷெடியூலில் கண்ட நிலங்களைப்பற்றிய பட்டாக்களை என்னுடைய அல்

லது எங்களுடைய பேருக்கு மாற்றிக் கொள்விக்கச் சம்மதிக்கிறோம்.

ஹ மீ உ கையெழுத்து.

## ஷெடியூல்.

| தாலூகா | கிராமம் | ஸர்வே நம்பர் | நஞ்செயா அல்லது புண்செயா | விஸ்தீர்ணம் | ரூ-தீர் | தொகை | ஷரா. |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |

19 ஹ மீ உ யாகிய இன்றையதினம் இருதரத்தாரும் எங்கள் முன்னிலையில் தம் தம் கையெழுத்துச் செய்தார்கள். முதல்பாகத்தில் கையெழுத்துச் செய்திருக்கிறவர்கள் பட்டாதார்.

ஹ மீ உ கிராமாதிகாரி கையெழுத்து.

## (C) தற்காஸ்த்து - விண்ணப்பப் பாரம்.

| புலங்களின் நம்பர் | விஸ்தீரணம் | தீர்வை. | | | எல்லைகள் | ஷரு |
|---|---|---|---|---|---|---|
| | எக்கர் செண்டு. | ரூ. | அ. | பை. | | |
| | | | | | | |

ஹ மீ உ கையெழுத்து.

## (D) இராஜிநாமாப் பாரம்.

| சர்வே நம்பர் | சர்வே நம்பரின் உட்பிரிவைக்காட்டிடும் எழுத்துக்கள் அல்லது லக்கங்கள் | விஸ்தீரணம் | | தீர்வை | நன்செய் அல்லது புன்செய் | ஷரா |
|---|---|---|---|---|---|---|
| | | எக்கர் | செண்டு | ரூ. அ. பை. | | |
| | | | | | | |

...........................ஜில்லா.....................தாலூகா
...........................பட்டாதார்கள்...............பெயர்
...........................................கிராமப்பெயர்.

ஷ மீ உ கையெழுத்து.

(1) ஜமாபந்தி என்பதாவது:—குடிஜனங்கள், தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் குறைவுகளை ஜமாபந்தி ஆபீசர் முன்பாக நிவர்த்தி செய்யவும், கிராமக் கணக்குகளைச் சரி பார்த்து, முடிவு செய்யவும் வருஷத்திற்கு ஒருதரம் கூடும் ஒரு கூட்டத்திற்கு ஜமாபந்தி என்று பெயர்.

(2) ஜமாபந்தியில் நடக்கும் வேலைகள்:—அந்தந்தத் தாலூகாவில் ஏற்பட்டுள்ள கிராம அதிகாரிகள் தங்கள் கணக்குகளை டிவிஷனல் ஆபீஸர் முன்பாக முடிவுசெய்வது. கிராமத்தார்களுக்கு ஏற்பட்டிருக்கும் தெண்டத்தீர்வை, பட்டா ராஜிநாமா, தர்க்காஸ்து முதலியவைகளை விசாரித்துப் பைசல் செய்வது.

### ரேவினியூ சம்மந்தமான நமூனைக்கள்.

செட்டில்மெண்ட் டிக்லாட் (Diglott) ரிஜிஸ்டர் நமூனா.

...........................ஜில்லா.....................தாலூகா
.................கிராமம் ரீஸர்வே செட்டில்மெண்ட் ரிஜிஸ்டர்.

1. ரீஸர்வே நம்பர் (Resurvey number)
2. உட்பிரிவு (Sub division) 1. லெட்டர். திக்கு.
3. பழைய ஸர்வே நம்பரும், லெட்டருமிருந்தால் அவை. (Old survey number and letter if any)
4. கவர்ன்மெண்டு அல்லது இனாம் (Government or Inam.
5. புன்செய், நன்செய் அல்லது புறம்போக்கு.
6. பாய்ச்சலாதாரம்.
7. ஒருபோகம் அல்லது இருபோகம்.
8. நிலத்தின் வகுப்பும் இனமும்.
9. தரம்.
10. எக்கர் 1க்குத் தீர்வை வீதம். 1, ரூபாய், 2 அணா.
11. விஸ்தீரணம். 1. எக்கர், 2. செண்டுகள்.
12. தீர்வை 1. ரூபாய், 2. அணா.

---

## விவசாய இலாகா.

## 23 ஆவது அதிகாரம்.

நாம் ஜீவித்திருப்பதற்கு அத்தியாவசியமானது ஆகாரம். ஆகாரத்திற்கு ஆதாரமானது விவசாயம். விவசாயத்திற்கு விசேஷமானதும், சமசீதோஷ்ண நிலைமைகள் ஒரே தன்மையாகவுள்ளதும் நமது இந்தியா தேசம். நமது நாட்டில் உழுது சாகுபடி செய்கிறவர்கள் உரமும், மழையும் ஜலமுமிருந்தால் வெள்ளாண்மை தானே விளையும் என்று கருதிச்செய்வார்கள். அது ஒருவாறு உண்மையாயினும், நிலங்கள் எல்லாம் ஒரே தன்மையுடையனவல்ல. நிலங்கள் எக்காலத்திலும் ஒரே தன்மையாயிருப்பவைகளுமல்ல. சாகுபடி செய்கிறவர்கள் புத்தி கூர்மைக்குத் தக்கபடி கெட்ட நிலங்கள் நல்லநிலைமைக்கு வருவதும், நல்லநிலங்கள் கெட்டநிலைமைக்கு வருவதும் உண்டு. வெள்ளாண்மை எல்லாம் வல்

லாண்மையாலேயன்றி வேறல்ல. வல்லாண்மை என்பது தேகபலமட்டுமல்ல. அதனோடு புத்திபலமும் சேரவேண்டும். இரண்டுபலமும் சேர்ந்தால்தான் வல்லாண்மையாகும். ஆதலால் வெள்ளாண்மைசெய்வோர் அதற்குரிய சாஸ்திரஞானத்தேர்ச்சிசெய்து வருவார்களானால் மிகுந்தலாபத்தை அடைய ஏதுவாய் இருக்குமென்பது கருதி, நமது இராஜாங்கத்தார் ஏராளமான திரவியத்தைச் செலவுசெய்து, இந்த விவசாய இலாகாவை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

(1) இந்த விவசாய இலாகாவின் மூலமாய்:—விவசாய சம்மந்தமான சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்றவர்களுக்குச் சம்பளம் கொடுத்தும், பாடசாலை வைத்தும், பல ஜில்லாக்களில் பண்ணைகள் ஏற்படுத்தியும், பயிர்செய்யும் நூதன வகைகளைக்கண்டுபிடித்து, இன்ன இடங்களில் இன்னபயிர் செய்தால் நல்லபலன் அடையலாமென்பதைத் தெரிந்தும், அதிகச்செலவு இல்லாமல் உரம் சேர்ப்பதற்கான வழிகளை அறிந்தும், பயிர்களுக்கு ஏற்படும் நோய்நொடிகளை நீக்கத் தக்க உபாயங்களையும், பயிர்களை அழிக்கும் பூச்சி புழுக்களைப் போக்கடிக்கத்தக்க வழிகளையும் கண்டுபிடித்து, விவசாயிகளுக்குப் போதித்து வருகிறார்கள்.

(2) இந்த இலாகா உத்தியோகஸ்தர்கள்:—

1. டைரெக்டர் ஆப் அக்ரிகல்ச்சர்.
2. பெர்ஸனல் அஸிஸ்டெண்ட் டைரெக்டர் ஆப் அக்ரிகல்ச்சர்.
3. டிப்டிடைரெக்டர்கள் ஆப் அக்ரிகல்ச்சர்.
4. அஸிஸ்டெண்ட் டிப்டி டைரெக்டர் ஆப் அக்ரிகல்ச்சர்.
5. பண்ணை மானேஜர்

6. டிமான்ஸ்டிரேட்டர்.
7. விவசாயக் காலேஜ் பிரின்ஸிபால்.
8. அக்ரிகல்ச்சரல் கெமிஸ்ட் (விவசாய ரசாயன சாஸ்திரி)
9. பாட்டனிஸ்ட் (தாவரசாஸ்திரி)
10. மைக்காலஜிஸ்ட்(பயிர்களை அழிக்கும் காளான் முதலியவைகளை அறியும் தாவர சாஸ்திரி)
11. எண்டமாலொஜிஸ்ட் (சிற்றுயிர் லக்ஷணமறியும் சாஸ்திரி)

(3) எண்டமாலொஜிஸ்ட் வேலையாவது:-இவர் கோயமுத்தூரிலுள்ள விவசாயக் காலேஜில் மாணவர்களுக்குப் பயிர் பச்சைகளை அழிக்கும் பூச்சி புழுமுதலியன உண்டாகும் காலம், அவற்றால் ஏற்படும் கெடுதிகள், அவற்றை அழிக்க ஏற்பாடு செய்யவேண்டிய முறை முதலிய இவைகளைப் போதிப்பார்.

(4) மைக்காலஜிஸ்ட் வேலையாவது:—பயிர்களை அழிக்கும் காளான் முதலியவை உண்டாவதற்குக் காரணங்களையும், அவற்றைப் போக்கும் மார்க்கங்களையும் போதிப்பார்.

(5) பட்டானிஸ்ட் வேலையாவது:—மரம், செடி, கொடி முதலியவை உற்பத்தி செய்யும்விதம், அவற்றிற்குக் கெடுதி ஏற்படும் காரணம், அவைகளை நீக்கும் மார்க்கம் இவைகளைப் போதிப்பார்.

(6) அக்ரிகல்ச்சரல் கெமிஸ்ட் வேலையாவது:—விவசாயம் செய்யும் விதங்கள், பயிர் வகைகள், அவை சுலபமாய்ப் பயிர் செய்யும் மார்க்கங்கள், அவற்றிற்கு உரம், உரம்போடும்விதம் முதலிய விபரங்கள், நல்லலாபம் தரக்கூடிய பயிர் செய்யும் மாதிரி இவைகளைப் பற்றிப் போதிப்பார்.

(7) விவசாயக்காலேஜ் பிரின்ஸிபால் வேலையாவது:— இவர் மேற்கண்ட உபாத்தியாயர்கள் சரியாய்ச் சொல்லிக் கொடுக்கிறார்களா வென்று கவனித்தும், தானும், மேற்கண்டவைகளைச் சரிவரப் போதித்தும் வருவார்

(8) இந்த விவசாயக்காலேஜ்:—கோயமுத்தூரிலிருக்கிறது. படிப்பவர்களுக்குச் சம்பளம் கிடையாது. போதிப்பவைகளைத் தெரிந்து கொள்ளக்கூடிய இங்கிலீஷ் தெரிந்திருந்தால் போதும். ஸ்கூல் பைனல் பரீக்ஷயிலாவது தேறியிருப்பது நல்லது. அங்கே விவசாயப் பண்ணையுமிருக்கிறது. அதில் பல விதமான பயிர் வகைகள் வெள்ளாண்மைசெய்து காண்பித்தும், கற்பித்தும் வருகிறார்கள்.

(9) டிமான்ஸ்டிரேட்டர் வேலையாவது:—சர்க்காரால் கிராமங்களில் ஏற்படுத்தியிருக்கும் விவசாயப் பண்ணைகளை மேற்பார்த்து வருவார்.

(10) பண்ணை மானேஜர் வேலையாவது:— இவர் நாலைந்து கிராமங்களில் உள்ள பண்ணை வேலைகள் சரியாய் நடந்துவருகிறதா என்று பார்த்துவருவார்.

(11) டிப்டிடைரேக்டர் வேலையாவது:— அவருடைய எல்லைக்குள்ளிருக்கும் பண்ணைகள் எல்லாவற்றையும் மேற்பார்த்து வருதல். அங்கங்கேயுள்ள பெரிய விவசாயிகளோடு நெருங்கிப்பழகி நூதனமாய்ப்பயிர் செய்யும் வகைகளையும் புதிதாய்க் கண்டுபிடித்து, உரம் முதலியவற்றையும் தெரிவித்து, அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லிவருதல், எங்கேயாவது விவசாயச் சங்கங்கள் ஏற்பட்டிருந்தால் அவர்களுக்கு ஆலோசனை சொல்

லல். இது சம்பந்தமான சகல நடபடிக்கைகளையு
டைரெக்டருக்குத் தெரிவித்தல். சிப்பந்திகளை நீக்குத
நியமித்தல் முதலிய வேலைகள்.

**(12)** அஸிஸ்டெண்ட் டிப்டி டைரேக்டர் வேலையாவது
இவரும் டிப்டி டைரெக்டரைப்போலவே வேலை பார்த்
வருவார்.

**(13)** டைரேக்டர் வேலையாவது:—இவர் சென்னைய
லிருப்பார். சென்னைராஜதானியில் இந்த இலாகா 8 பிரிவு
ளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவிற்கு
ஒவ்வொரு டிப்டிடைரெக்டர் தலைவராய் இருப்பார்
அவர்கள் செய்யும் வேலைகள் சரியாவென்று கவனித்து
இது சம்பந்தமான சகலவிஷயங்களையும் கவர்ன்மெண்டு
குத் தெரிவிப்பார்.

**(14)** கவர்ன்மெண்டார் இதுசம்பந்தப்பட்ட:—விஷய
களை எல்லாம் துண்டுப் பத்திரிகைகள் மூலமாயும், வி
சாயப் பஞ்சாங்கம் மூலமாயும், உடனுக்குடன் பிரசுர
செய்து, ஜனங்களுக்குத் தெரிவித்து வருகிறார்கள்.







# ஜில்லா பூகோள வர்[illegible]

இவை பசுமலை உயர்தர பாடசாலைத் தமிழ் [illegible] தர் ஸ்ரீமத் நெ. ரா. சுப்பிரமணிய சர்மா அவர்களால் துரைத்தனத்தார் ஏற்படுத்திய புதிய விதிகளை அனுசரித்து எழுதப் பெற்று, தமிழ்நாடு முழுதும் பாராட்டப்பட்டு வருகின்றன.

| | | |
|---|---|---|
| மதுரை ஜில்லா பூகோள சாஸ்திரம் | | 0—4—0 |
| இராமநாதபுரம் ஜில்லா | ஷை | 0—4—0 |
| திருநெல்வேலி ஜில்லா | ஷை | 0—4—0 |
| திரிச்சிராப்பள்ளி ஜில்லா | ஷை | 0—4—0 |
| தஞ்சாவூர் ஜில்லா | ஷை | 0—4—0 |

இவற்றுள் அந்தந்த ஜில்லாக்களின் சரித்திரமும் பொதுவாய் அரசியலும் சுருக்கமாக எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளன.

இதர ஜில்லாக்களின் பூகோளம் விரைவில் வெளிவரும்.

---

## உப பாடமாக வைக்கத்தகுந்த புத்தகங்கள்.

| | |
|---|---|
| கதையும் பாட்டும் 1, 2 பாகங்கள் தனித்தனி | 0—3—0 |
| இராணி மங்கம்மாள் சரித்திரம் | 0—1—0 |
| திருமலைநாயக்கர் சரித்திரம் | 0—2—0 |
| ஷை பெரியபுத்தகம் | 0-10—0 |
| கிருஷ்ணன் தூது | 0—2—0 |
| இல்லாண்மை | 0—4—0 |
| பெரியார் பெருமை | 0—3—0 |
| கண்ணன் பாலலீலை | 0—6—0 |
| இராமாயண சாரசங்கிரகம் | 0—6—0 |
| பாரத சாரசங்கிரகம் | 0—6—0 |
| பாகவத சாரசங்கிரகம் | 0-10—0 |
| விராடநகரத்தின் ரகசியம் | 0-12—0 |
| விநோதக்கதைகள் | [illegible]-10—0 |
| மாணவர் நீதிக்கதைகள் | [illegible]6—0 |
| நல்லொழுக்க போதம் | [illegible]—0 |
| [illegible]தனபயிற்சிக் கணிதவாய்ப[illegible] | [illegible]—6 |

# இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன் வெளியிட்ட

# தமிழ்ப் புத்தகங்கள்.

*துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பெற்றன.*

---

புதிய பாடப் புத்தகங்கள்:—இவை துரைத்தனத்தா விதிகளை அனுசரித்து, நூதன போதனுமுறைக் கிணங்க, சுகாத ரம், அரசியல், பூமிசாஸ்திரம், இலக்கணம், தேகதத்துவம், பிர ணிசாஸ்திரம், தாவரசாஸ்திரம், புராணம், சரித்திரம் முதலியவ வகுப்புக்குத் தக்கவாறும், மாணவர்கள் எளிதில் உணருமாறு சிறந்த தமிழ் நடையில் எழுதப் பெற்றுள்ளன.

| | |
|---|---|
| புதிய முதல் பாடம் | 0—2— |
| புதிய இரண்டாம் பாடம் | 0—3— |
| புதிய மூன்றாம் பாடம் | 0—3— |
| புதிய நான்காம் பாடம் | 0—4— |
| புதிய ஐந்தாம் பாடம் | 0—6— |

---

நல்லொழுக்க போதவர்க்கம்; நீதிவாக்கியக் கதைகள்.

| | | |
|---|---|---|
| உலகநீதி | நீதிவாக்கியக் கதைகள் | 0—2— |
| ஆத்திசூடி | நீதிவாக்கியக் கதைகள் | 0—2— |
| கொன்றைவேந்தன் | நீதிவாக்கியக் கதைகள் | 0—2— |
| வெற்றிவேற்கை | நீதிவாக்கியக் கதைகள் | 0—3— |
| மூதுரை | நீதிவாக்கியக் கதைகள் | 0—5— |
| நல்வழி | நீதிவாக்கியக் கதைகள் | 0-10— |

ஒவ்வொரு வகுப்பிற்கும் குறித்துள்ள செய்யுட்பாட வாக் யங்களை மாணாக்கர்கள் நெட்டுருக்கொண்டு பதவுரை, கருத்துரை களை மனனம் செய்தும், அவைகளின் கருத்துக்கள் மனதில் ப யாது நிற்கும் குறையை நீக்கும் நோக்கங் கொண்டு, கதைகளை மைத்துத் தெளிவது, அக்கருத்தமைந்த வாக்கியங்களைக் கற்ற கண்மேல்பதிந்த எழுத்தைப்போல் மனதில் நிலைபெறுமாறுஎழுத பெற்றுள்ளன. நல்லொழுக்கப் போதத்திற்கும் இவைநற்றுணைய கும். கதாவாசகப் புத்தகங்களாகவும் இவற்றை வழங்கலாம். கா போவிஷன்என்னும்பாஷாஞானபோதத்திற்கும் இவை ஏற்றவை

---